ISSN: 2455 - 0531
UAN: TN0300061112

# இனம் INAM

பல்துறைப் பன்னாட்டு இணையத் தமிழாய்விதழ்
Multi Diciplinary International E- Journal of Tamil Studies

Since 2015 முதல்

பிப்புருவரி, மே, ஆகட்டு, நவம்பர் மாதங்களில் வெளிவரும் | Published in February, May, August and November

மலர்: 10, இதழ்: 38, மே, 2024 | Vol.: 10, Issue: 38, May, 2024



இரட்டைக் காப்பியங்களில் மணிமேகலைப்...

கோவலன் - கவுந்தியடிகள்...

முரவுவாய்க் குழிசி முரியடுப்பு

இறையடியானின் அகிலப்பேரொளி

# பத்தாம் ஆண்டுப் பயணத்தில் ‘இனம்’

2015இல் தொடக்கம். தமிழியலில் அச்சு இதழ்கள் பரவலாகக் கவனம் பெற்றிருந்த காலம் அது. கோயமுத்தூரிலிருந்து, தொலைபேசி உரையாடலினூடாக “நாம் இருவரும் சேர்ந்து இதழ் ஒன்று தொடங்குவோமா?” என்று செய்தி வந்து விழுந்தது. எதிர்முனை திருச்சிராப்பள்ளியில். “இதழ் தொடங்குவதென்றால் பொருளாதாரம் அதிகம் தேவைப்படுமே? நாம் இருவருமே சுயநிதிப் பிரிவில் சில ஆயிரங்கள் ஊதியம் பெற்றுக்கொண்டு எவ்வாறு சாத்தியம்? எனும் இரு வினாக்கள் எதிர்முனையிலிருந்து. அப்படியெனில் மின்னிதழ் தொடங்குவோமே! எனும் நேர்மறைத் தகவல் மறுமுனையிலிருந்து. “இதழுக்குரிய பெயரையும் நீங்களே முடிவு செய்து கூறுங்கள்” எனும் கூடுதல் பொறுப்பும் வந்தது. இப்போது பெயர் குறித்த சிந்தனையில்.

ஒற்றைச்சொல்லாகத் திகழ வேண்டும்; சிறுசொல்லாகத் திகழ வேண்டும்; குறிப்பாக, பன்மை அடையாளத்தை உணர்த்த வேண்டும் எனும் தொலைநோக்கோடு சிந்தித்த பெயரே ‘இனம்’.

எங்கள்மீது நன்மதிப்பும் ஆய்வில் தொடர் ஈடுபாடும் கொண்ட அறிஞர் பெருமக்களையும், இளம் ஆய்வாளர்களையும் தொடக்கத்தில் அணுகி, முன்ஒப்புதல் பெற்று, ஆலோசனைக் குழுவிலும் ஆசிரியர் குழுவிலும் இடம்பெறச் செய்தோம். அன்னாருள் பலரின் ஒத்துழைப்பு (நன்கொடை எனும் பெயரில், இதழ்க் கட்டுரை மதிப்பீடு எனும் பெயரில், பணிபுரியும் நிறுவனத்துடன் இணைந்து கருத்தரங்கினை ஒருங்கிணைத்தல், அவ்வப்போது தகுதியான ஆய்வுக்கட்டுரை வழங்குதல், என) தொடர்ந்து கிடைத்து வருகின்றது. அதனால்தான் இதழானது பத்தாண்டு மைல்கல்லை எட்டியுள்ளது. மகிழ்ச்சியும் நன்றியும்!

இடைப்பட்ட காலத்தில், இதழ் நிருவாக மேலாண்மைக்காக, உதவிக்காகப் பதிப்பகமும் தொடங்கப்பட்டது தனி நிகழ்வு.

2017-2018வரை பல்கலைக்கழக மானியக் குழுவின் ஏற்புநிலை, GOOGLE SCHOLAR, ISSN, JOURNAL FACTOR, IIJIF, COSMOS, CITE FACTOR, SCIENTIFIC JOURNAL IMPACT FACTOR, JIFACTOR, ZENODO DOI, ARCHIVES என இதழின் பல்வேறு தள அடையாளங்களுடன் வெளிவந்து கொண்டிருக்கின்றது. இன்னும் இனம் போன்ற தமிழ் ஆய்விதழ்கள் உருவாக வழிகாட்டிய இனிமையும் உண்டு. இனம் ஆய்விதழில் வெளியிடப்பெறும் ஆய்வுகள் தரப்புள்ளிகள் (H index, I index போன்ற) பெறும் களங்களையும் ஆய்து வருகின்றது. இப்படி வளர்ச்சியை நோக்கிச் செல்லும் இனம் இடையில் சில மாதங்கள், தமிழர்க்கேயுரிய ‘புகைமை மனவுணர்வு’ காரணமாக இணையப் பக்கம் முடக்கம் எனும் எதிர்நிலையினூடாகவே இதழ் நடந்து வந்தது.

தமிழ்நாட்டிலிருந்து தற்போதைய காலம் வரைக்கும், ஆய்வு நெறிமுறைகளைக் கவனத்திற் கொள்ளாத சில கட்டுரைகளும் வந்து சேர்கின்றன எனும் கசப்பான உண்மையையும், அயலகத்திலிருந்து (குறிப்பாக, இலங்கை, சிங்கப்பூரிலிருந்து) வரும் கட்டுரைகள் முறையான தரவுகளோடும் உரிய அணுகுமுறைகளைப் பின்பற்றியும் வந்து சேர்கின்றன எனும் இனிப்பான உண்மையையும் சொல்லியே ஆக வேண்டும்.

சமகால இதழ் வெளியீடுகளில் 95 விழுக்காடு மொழிப்பிழைகளின்றி வெளிவரும் ஆய்விதழ் எனும் பெயரைப் புறமதிப்பீட்டாளர்களால் பெற்ற தகுதிப்பாடு உடையது எனும் பெயரோடு, ஆய்வு முறையியலையும் கவனத்திற் கொண்டு, முன்னோக்கி நடைபோடுகின்றது ‘இனம்’.

மகிழ்வுடன்,

**மு. முனீஸ்மூர்த்தி**
**சத்தியராஜ் தங்கச்சாமி**
முதன்மைப் பதிப்பாசிரியர்கள்

இனம் | INAM (IIETS)
E-ISSN: 2455 - 0531 | UAN: TN0300061112
மலர் : 10 | இதழ் : 38 | மே | 2024 | Vol.: 10 | Issue: 38 | May | 2024

## உள்ளே...

இனம் | INAM (IIETS)
E-ISSN: 2455 - 0531 | UAN: TN0300061112
மலர் : 10 | இதழ் : 38 | மே | 2024 | Vol.: 10 | Issue: 38 | May | 2024

# முரவுவாய்க் குழிசி முரியடுப்பு muravuvāyk kuḻici muriyaṭuppu

**கண்மணி கணேசன் ச. | Kanmani Ganesan S.**[1ORCID]

[1] Former etired Principal & HOD in Tamil, Srikaliswari college, Sivakasi in Tamilnad. India. E mail: kanmanitamilskc@gmail.com, DOI: 10.5281/zenodo.11315674

**ஆய்வுச்சுருக்கம் (Abstract)**

பத்துப்பாட்டுள் ஒன்றாகிய பெரும்பாணாற்றுப்படையில் இடம்பெறும் "முரவுவாய்க் குழிசி முரியடுப்பு" என்ற தொடரின் பொருளைத் தெளிவாகப் புரிந்து கொள்வதே இக்கட்டுரையின் நோக்கம் ஆகும். தொகைநூற் காலத் தமிழர் அடுப்பு மூட்டிய முறைகளில் புத்தொளி பாய்ச்ச வழிவகுக்கும் என்ற அளவில் இக்கட்டுரை சிறப்புப் பெறுகிறது. விளக்கமுறை ஆய்வாக அமையும் இக்கட்டுரைக்குக் குறிப்பிட்ட பாடல்தொடர் மட்டுமே முதன்மை ஆதாரம் ஆகச் சிலப்பதிகாரம், நிகண்டுகளும் அகராதிகளும் தரும் பொருள்கள், உரையாசிரியர் தரும் கருத்துகள், வலைத்தளக் காணொளிகள் காட்டும் இன்றைய நடைமுறைகள் ஆகியன இரண்டாம் நிலைத் தரவுகள் ஆகின்றன. திறவையான குழியின் நடுவில் அடுகலனை வைத்துச் சுற்றிலும் மேலும் கீழும் சுள்ளிகளை அடுக்கி எரிபொருளாக்கிச் சமைப்பது முரவுவாய்க் குழிசி முரியடுப்பு என்று தெரிகிறது.

The aim of this article is to draw a clear picture about the phrase "*muravuvāyk kuḻici muriyaṭuppu*" in *perumpaanaarruppadai*; one among the ten idylls. The significance of the study is that it throws some light on the practice of the early Tamils preparing a furnace for cooking. The same phrase alone forms the primary source for the descriptive study. The secondary sources are the other hymns of the anthologies, *Cilappatikaram*, meanings given in *nikandukal and dictionaries*, views of the commentators and current practices as shown in the U-tube videos. It is found that people cooked food in an open pit placing the cooking pot in the middle surrounded on all sides; up and down by twigs as the source of fire.

**திறவுச்சொற்கள் (Keywords):** குழிசி, முரியடுப்பு, முரவுவாய், முரி, முரிந்த அடுப்பு, விளிம்பு உடைந்த பானை

## முகவுரை

"முரவுவாய்க் குழிசி முரியடுப்பு" என்ற பாடல் தொடரைத் தெளிவுபட விளக்குவது இக்கட்டுரையின் நோக்கம் ஆகும். தமிழக வரலாற்று ஏடுகளில் இடம்பெறும் தொகைநூற் காலச் சமூகத்தின் வாழ்வியல் பழக்கங்களை முழுமையாக அறிய; பண்பாட்டுக் கூறுகளைப் பல கோணங்களில் கண்டு விளக்கும் முயற்சியின் ஒரு கூறாக இவ்ஆய்வு அமைகிறது. விளக்க முறையில் அமையும் இக்கட்டுரைக்குக் குறிப்பிட்ட பாடல் தொடரே முதன்மை ஆதாரம் ஆகும். இரண்டாம்நிலைத் தரவுகளாகத் தொகைநூல்கள், சிலப்பதிகாரம், அகராதியும் நிகண்டும், உரையாசிரியர் விளக்கங்கள், இன்றைய நடைமுறைகள் ஆகியன அமைகின்றன.

## *முரி அடுப்புப் பயன்பாடு*

எயினர் தாம் தோண்டிய குழியில் சுள்ளிகளைத் திறம்பட நிரப்பி அடுப்பு ஆக்கினர். கரம்பை நிலத்தைப் பாறைகளால் தோண்டிப்; புல்லரிசியை வாரி; ஆழ்ந்த கிணற்றில் அரிதில் தோண்டிக் கிடைத்த ஊற்றில் இருந்து உவர்நீரை எடுத்து; உலையாக ஊற்றி; பார்வை மானால் கையகப்படுத்திய ஆண்மானின் பதப்படுத்திய ஊனைப் புல்லரிசியோடு ஒருசேர அடுகலனில் பெய்து; குழியின் நடுவில் சுள்ளிகட்கு இடையில் வைத்துச்; சுள்ளிகளைப் பரப்பி மூடிச் சமைத்தனர் (பெரு.அ.94-100).

இனம் | INAM (IIETS)
E-ISSN: 2455 - 0531 | UAN: TN0300061112
மலர் : 10 | இதழ் : 38 | மே | 2024 | Vol.: 10 | Issue: 38 | May | 2024

குறவர் மான்கறி வேக வைத்த புலால் நாறும் பானையைப் புறத்தே கழுவாமல் அடுப்பில் ஏற்றிச் சமைத்தனர் (புறம்.168); ஏன் எனில் அது முரிஅடுப்புச் சமையல் என உய்த்து உணர முடிகிறது. அடுத்தடுத்து முரிஅடுப்பில் ஏற்றிய பானை தவிர்க்க இயலாது கரிப் பிடித்து இருப்பதும்; அதைப் புறத்தே கழுவிப் பயன் இல்லை என்பதும் வெளிப்படை.

**'முரவுவாய்க் குழிசி'**

பொ.வே.சோமசுந்தரனார் 'முரவுவாய்க் குழிசி'யை விளிம்பு உடைந்த பானை என்கிறார் (பத்துப்பாட்டு தொகுதி-I, பெரும்பாணாற்றுப்படை, ப.71-74). ஔவை சு.துரைசாமிப் பிள்ளை "முரவுவாய்... குழிசி" (புறம்.371) 'சிதைந்த விளிம்புடைய பானை' என உரை கூறுகிறார் (புறநானூறு பகுதி II- ப.355).

உரையாசிரியர்கள் கூற்றுடன் நடைமுறை உண்மை முரண்படுகிறது. விளிம்பு உடைந்த பானையில் தானியங்களை வேக வைக்கும் போது; கொதிநிலை அடைந்தவுடன் உலைநீரோடு வேகும் தானியமும் சேர்ந்து சிந்தும். கொதி அடங்கி; சோறு பொருந்தி வேகும்போது உலைமூடி இட்டாலும் நீராவி வெளியேறும். மொத்தத்தில் விளிம்பு உடைந்த மட்பாண்டத்தில் சரிவரச் சமைக்க இயலாது.

'முரவுவாய்' என்ற அடை பிற பெயர்களோடும் சேர்ந்து வருகிறது. 'முரவுவாய்ப் புற்றம்' (அகம்.72), 'முரவுவாய் முதுபுள்' (அகம்.260), 'முரவுவாய் ஞாயில் ஓரெயில்' (அகம்.373) எனப் பாடல்களில் பயில்வதைக் காண்கிறோம். ந.மு.வேங்கடசாமி நாட்டாரும் ரா.வேங்கடாசலம் பிள்ளையும் சேர்ந்து எழுதிய உரையில் மேற்சுட்டிய மூன்று சொற்றொடர்களில் உள்ள 'முரவுவாய்' எனும் சீருக்கு உரைக்கும் பொருள்களாவன;

'முரவுவாய்ப் புற்றம்' = முரிந்த இடத்தை உடைய புற்றம் (அகநானூறு களிற்றியானை நிரை- ப.191);
'முரவுவாய் முதுபுள்' = முழங்கும் வாயை உடைய பேராந்தை (அகநானூறு மணிமிடை பவளம்- ப.331);
'முரவுவாய் ஞாயில்' = முறிதல் பொருந்திய சூட்டினை உடைய மதில் (அகநானூறு நித்திலக்கோவை ப.162)

என்பதாம். இப்பொருட்கள் தம்முள் முரண்படக் காண்கிறோம். ஆயின் முதுபுள்ளாகிய கிழட்டுப் பேராந்தை, புற்றின் வாய், ஓரெயிலின் ஞாயில் ஆகியவற்றின் வாயோடு முரவுவாய்க் குழிசியின் வாய் ஒத்த தோற்றம் கொண்டு இருப்பதைப் படங்கள் வாயிலாகவும் விளக்கம் மூலமாகவும் எடுத்துக் காட்ட இயல்கிறது.

வயோதிகம் காரணமாக எப்போதும் திறந்தே இருக்கும் ஆந்தையின் வாய் 'முரவுவாய்' என்ற சொற்றொடரின் பொருளைத் தெளிவாக்குகிறது (படம்-1). மூடாது பிளந்தே கிடக்கும் வாய் கிழட்டுத் தன்மையின் அடையாளம் ஆகும்.



படம்:1- முரவுவாய் முதுபுள்

புற்றின் வாயில்கள் அனைத்தும் எப்போதும் திறந்தே காணப்படும் (பார்க்க: படம்-2); மூடி இருப்பதில்லை.



படம் 2- முரவுவாய்ப் புற்றம்

குறுநில மன்னரின் மாளிகையைச் சூழ்ந்து இருக்கும் ஒரெயிலின் ஞாயில் சுற்றுச்சுவரை மட்டுமே உடையது. அதில் வேந்தரின் கோட்டையில் இருந்தது போல்; போர் செய்தற்கு உரிய கொத்தளங்களோ; இயந்திரங்களை வைப்பதற்கு உட்கோட்டைச் சுவருடன் கூடிய தளமோ இரா. தூரத்தில் வரும் எதிரிகளை நோட்டமிட இடுக்குகளோ, அம்புகளை வைத்துக் குறிபார்க்கும் துவாரங்களோ இருக்காது. மதுரைக் கோட்டை படைப்புரிசையுடன் கூடிய வேந்தர் கோட்டைக்குத் தக்க சான்று ஆகிறது (மதுரைக்காஞ்சி அ.351-356 & சிலப்பதிகாரம்- அடைக்கலக் காதை- அ.207-218). இவை ஏதும் அற்ற ஒரெயிலை மேலிருந்து பருந்துப் பார்வையாகப் பார்க்கும்போது முற்றிலும் திறந்த நிலையிலேயே காணப்படும். அதனால்தான் 'முரவுவாய்' என்ற அடைமொழி குறுநில மன்னரின் ஞாயிலுக்கு உரித்தானது. இக்கருத்தை உறுதி செய்வதற்கு ஏற்ப; 'பருந்து உயிர்த்து மதிலில் அமர்ந்திருக்கக்; குறுநில மன்னருக்காகப் போர்செய்த வீரர் பகைவர்க்கு மயக்கம் தரும் பாதைகளில் எதிரிகளை மடக்கினர்' (புறம்.354). படைப் புரிசை இல்லாமையால் ஊர்த்தெருக்களில் போர் நிகழ்ந்தது என உரைக்க இயல்கிறது. எனவே 'முரவுவாய்' என்னும் பெயரடை 'மூடாத' எனப் பொருள்படுகிறது. 'குழிசி' இடம் நோக்கிப் பானை, குழி என இரு பொருள் படும்.

> "பறையொடு தகைத்த கலப் பையென் முரவு வாய்
> ஆடுறு குழிசி பாடு இன்று தூக்கி" (புறம்.371)

என்ற அடிகட்குப் 'பறையுடன் பிற இசைக்கருவிகளைக் கட்டிய பை என்பதால்; பாதுகாப்பாக எடுத்துச்செல்ல ஏதுவாக அடுகலனாகிய பானையைத் தூக்கியதாக' ஔவை சு.துரைசாமிப் பிள்ளை பொருள் கூறுகிறார். பின்னரும்;

"முரவுவாய்... குழிசி" = 'விளிம்பு உடைந்த பானை'

எனக் கூறுவது பட்டறிவின் பாற்பட்ட பொருள் இல்லை. எனவே புறப்பாடல் சுட்டும் 'முரவுவாய்... குழிசி' திறந்த நிலையில் இருக்கும் குழிசியே ஆகும். குழியைக் 'குழிசி' என்று அழைப்பது வட்டார வழக்கு என்பது களஆய்வில் திரட்டிய செய்தி. வண்டிச் சக்கரத்தின் ஆரக்கால்கள் கும்பத்தின் அச்சில் தோண்டிய குழிகளில் பொருந்தி இருக்கும். கொங்கு வட்டாரத்தில் கும்பம்; குழிசி எனும் மாற்றுப் பெயர் பெறுவதால்; குழிசி = தோண்டிய குழி; எனப் பொருள்படுகிறது.

இனம் | INAM (IIETS)
E-ISSN: 2455 - 0531 | UAN: TN0300061112
மலர் : 10 | இதழ் : 38 | மே | 2024 | Vol.: 10 | Issue: 38 | May | 2024

சூடாமணி நிகண்டு 'குழி = கிணறு, வாவி' என்ற பொருள்களைத் தருகிறது. கிணறும் வாவியும் தோண்டப் படுபவை (ச.வே.சுப்பிரமணியன் (ப.ஆ.), தமிழ் நிகண்டுகள் தொகுதி-1 சூடாமணி நிகண்டு, ப.224). இதனால் 'முரவுவாய்க் குழிசி' முரிஅடுப்பு மூட்டத் தோண்டிய குழி என்பது உறுதி ஆகிறது (பார்க்க: படம்-3).



படம் 3- முரவுவாய்க் குழிசி

சமைப்பதற்குரிய பானை 'களிபடு குழிசி' (அகம்.393); 'அடல்... குழிசி' (புறம்.393) என்றெல்லாம் விதந்து பேசப்படுவதாலும் பெரும்பாணாற்றுப்படையின் 'முரவுவாய்க் குழிசி' திறந்தநிலைக் குழியே என்பது தேற்றம்.

**முரிஅடுப்பு**

பொ.வே.சோமசுந்தரனார் முரிஅடுப்பு என்ற சொற்றொடரை வினைத்தொகையாகக் கொண்டு 'முரிந்த அடுப்பு' என்கிறார் (மேற்.). முரிந்த அடுப்பில் சமைப்பது நடைமுறைக்கு ஒவ்வாதது. ஏனெனில் சமைக்கும்போது அவ்அடுப்பு சிதைந்துவிடும் வாய்ப்பு உளது. அத்துடன் முரிந்த அடுப்பில் சமைப்பது குடும்பத்திற்குக் கேடு விளைக்கும் என்ற நம்பிக்கை அடிப்படையிலான நாட்டார் வழக்காறும் உளது.

சுள்ளிக்கட்டு கிடக்கும் முற்றம் 'முரிவாய் முற்றம்' என்றே பாடல் பெறுகிறது (புறம்.261). மல்லிகிழான் காரியாதி இயற்கை எய்திய உடன்; இடையறாது விருந்தினரைப் புறந்தந்த அவனது வீட்டுமுற்றத்தில் விருந்து தயாராகவில்லை ஆதலால்; எரிக்கப்படாத சுள்ளிக்கட்டு நீர் வறண்ட ஆற்றில் நின்ற ஓடம் போல் காணப்பட்டது எனப் பாடல் பெறுகிறது.

ஔவை சு.துரைசாமிப்பிள்ளை 'முரிவாய்' என்பதை வினைத்தொகையாகக் கொண்டு; 'முரிந்த குறட்டை உடைய முற்றம்' எனப் பொருள் உரைக்கிறார் (புறநானூறு-பகுதி-II, 2007, ப.128). பழைய உரையாசிரியரும் 'வாயென்றது குறடு; அது பலரும் சார்தலால் தேய்ந்து முறிந்து கொண்டு முரிவாய் முற்றம் எனப்பட்டது' என்கிறார் (முன்னது-ப.129).

'முரி' என்பதற்கு அகராதி 'வளைத்து ஒடித்தல்/ வெட்டி முரித்தல்/ துண்டாக்கல்' எனப் பொருள் தருகிறது (செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி, ப.282). எனவே முரி அடுப்பு 'ஒடித்த சுள்ளிகளால் ஆன அடுப்பு' என மூன்றாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகையாகப் பொருள் கொள்ளலாம்.

பாரம்பரியச் சமையல் பற்றிய காணொளிகள் சுள்ளிகளை அடுப்பாக்கி எரிக்கும் முரிஅடுப்பைக் காட்டுகின்றன (பார்க்க:

🔥மண்பானையில் 🍯🍗சிக்கன் செய்யலாம் வாங்க🔥#chicken #trending #trendingvideo #shorts - YouTube ; https://youtu.be/bjiLDiEJARQ) எனவே தோண்டிய திறந்தநிலைக் குழியில் அடுகலனை வைத்துச் சுள்ளிகளால் சூழ மூடி எரிப்பதே 'குழிசி முரிஅடுப்பு' எனல் உறுதி.

**முடிவுரை**

பண்டைய தமிழகத்தில் திறந்தநிலைக் குழியில் சுள்ளிகளைப் போட்டு அவற்றின் இடையில் அடுகலனை வைத்துப் பின் மேலே சுள்ளிகளால் நிரப்பி நெருப்பு மூட்டி அடும் முரவுவாய்க் குழிசி முரிஅடுப்பைப் பயன்படுத்தினர்.

**துணைநூற்பட்டியல்**


1. *Akanaanooru kalirriyaanai nirai,* (2009), *kazhaka veliyeedu, chennai.*
2. *Akanaanooru manimidai pavalam,* (2007). *kazhaka veliyeedu, chennai.*
3. *Akanaanooru niththilakkovai,* (2008), *kazhaka veliyeedu, Chennai.*
4. *Chilappathikaaram*, (1975). *Kazhaka veliyeedu*, Chennai.
5. *Chenthamizhch Chorpirappiyal Perakaramuthali-* volume VII - part II, (2007). *Chenthamizhch chorpirappiyal akaramuthalith thitta iyakkaka veliyeedu*, Chennai.
6. *Paththuppaattu* part i, (2007), *kazhaka veliyeedu, Chennai.*
7. *Paththuppaattu* part ii, (2008), *kazhaka veliyeedu, Chennai.*
8. *puranaanooru-* part- i&ii (2007). *kazhaka veliyeedu, chennai*
9. *Subramanyam Sa.Ve.* (ed.), Tamil *Nikandukal-* part-I, (2013). *Meyyappan*
10. *pathippakam*, Chidambaram.
11. 🔥மண்பானையில் 🍯🍗சிக்கன் செய்யலாம் வாங்க🔥#chicken #trending #trendingvideo #shorts - YouTube ; https://youtu.be/bjiLDiEJARQ)

இனம் | INAM (IIETS)
E-ISSN: 2455 - 0531 | UAN: TN0300061112
மலர் : 10 | இதழ் : 38 | மே | 2024 | Vol.: 10 | Issue: 38 | May | 2024

# இறையடியானின் அகிலப் பேரொளி (இறைமகன் இயேசுவின் நவீன பாவிகம் - கன்னட மொழிபெயர்ப்பு) IRAIYADIYANIN AKILA PEROLI(Christ Jesus' Modern poems – Translated in Kannada)

**முனியசாமி சே I Muniyasamy S[1]ORCID**

[1]தமிழ் உதவிப்பேராசிரியர், மன்னர் திருமலை நாயக்கர் கல்லூரி, பசுமலை, மதுரை-625004, +919786089440, muniyasethu@gmail.com
DOI: 10.5281/zenodo.11315863

**ஆய்வுச்சுருக்கம் (Abstract)**

தாஸ் எனும் இயற்பெயர் கொண்ட இறையடியான் பெங்களூரைச் சேர்ந்தவர். கன்னடத்தில் இருந்து தமிழுக்குப் பல நூல்களை மொழிபெயர்த்துக் கொடுத்துள்ளார். சுமார் 25 ஆண்டுகளாய் கன்னடம்-தமிழ் மொழிபெயர்ப்புப் பணியில் ஈடுபட்டிருந்தவர். 2019 ஆம் ஆண்டு பெங்களூர் அன்னபூர்ணா பதிப்பகத்தாரால் 'அகிலப் பேரொளி' என்னும் நூல் வெளியிடப்பட்டது. இந்நூலின் மூல ஆசிரியர் பி.எஸ்.தளவாடி. கன்னட மூலத்தைத் தமிழில் இறையடியான் மொழிபெயர்த்துள்ளார். 887 பக்கங்களைக் கொண்டு திகழும் இந்நூல் வேதாகமத்தைத் (Bilble) தழுவி இன்றைய சமகால நிகழ்வுகளைச் சித்தரித்து கன்னட மக்களின் வாழ்வியலோடு இணைத்து இயற்றப்பட்டதாகும். இந்நூலை அறிமுகப்படுத்தி விளக்கும் முகமாக இக்கட்டுரை அமைகிறது.

Irayadiyan who is called as Doss, belongs to Bangalore. He has translated many books from Kannada to Tamil. He has been in the field of translation for approximately 25 years. The book 'Akilaperoli was published by Annaporna publications in the year 2019. The author of the source book is P.S. Thalavadi and it was translated in Tamil by Irayadiyan.

This book has 887 pages which depictes the life of the present events relating to the Bible, connecting the life style of Kannaada people. This article is based on introducing and explaining the book "Akilaperoli".

**திறவுச்சொற்கள் (Keywords):** அகிலப் பேரொளி, ஸ்ரீ புவன சோதி, இறையடியான், பி.எஸ்.தளவாடி, இயேசுவின் நவீன பாவிகம்

## நூலுக்கு எழுந்த உரைகள்

ஆசியுரை, அணிந்துரை, ஆசிரியர் உரை, ஆக்கியோன் உரை என நூல் பற்றியும், நூலின் சிறப்பையும், நூல் எழுந்த காரணத்தையும், நூலின் தேவையையும், மொழிபெயர்ப்புச் சிக்கல்களையும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

## ஆசியுரை

பெங்களூரைச் சேர்ந்த பாதிரி பிரபாகர் என்பவர் நூலின் தொடக்கமாக ஆசியுரை வழங்கியுள்ளார். கிறிஸ்தவர்களின் ஜீவநூல் வேதாகமம் (Bible) ஆகும். இந்நூல் பழைய ஏற்பாடு, புதிய ஏற்பாடு என இரு பெரும் பிரிவுகளையுடையது. பழைய ஏற்பாட்டில் 39 பகுதிகளும், புதிய ஏற்பாட்டில் 27 பகுதிகளும் என 66 பகுதிகளைக் கொண்டு திகழ்கின்றது. இயேசு கிறிஸ்து பிறப்பதற்கு முன் எழுதப்பட்டது பழைய ஏற்பாடு. இயேசு கிறிஸ்து பிறந்தபின் எழுதப்பட்டது புதிய ஏற்பாடாகும்.

கடவுளுக்கும் மனிதனுக்கும் இடையே ஏற்பட்ட ஓர் உடன்படிக்கைதான் பைபிளென ஆசியுரையில் சுட்டியுள்ளார். பொதுவாகக் கடவுளின் நற்செய்தியை உள்ளடக்கிய நூல் மட்டுமல்ல பைபிள். அது பண்பாட்டின் விழுமியம் என்ற கருத்தினையும் முன்வைக்கின்றது. **"பன்முக பண்பாடுகள், பன்மொழிகளின் நுட்பமான விவரங்களோடு இறையடியானின் நுண்மான் நுழைபுல அனுபவத்தில் 'அகில பேரொளி' என்கிற இந்த நூல் கடைத்தெடுக்கப்பட்ட சிற்பமாகி உள்ளது."** எனக் குறிப்பிடுகின்றார். (அகிலப் பேரொளி, ப.iii)

**அணிந்துரை**

மதுரை நொபிலி அருட்பணி மையத்தின் இயக்குநர் மதுரை ஆனந்த் இந்நூலுக்கு அணிந்துரை அளித்து அழகுபடுத்தியுள்ளார். கம்பராமாயணம் தொடங்கி மணிமேகலை, சீவக சிந்தாமணி, சிலப்பதிகாரம் ஆகிய தமிழ்ப் பெரும்காப்பியங்கள் இறைமைப் பொருளைப் பாடும் கற்பனைக் களஞ்சியங்களாக அமைந்துள்ளன. இவை ஒவ்வொரு தலைமுறையினராலும் படித்து ரசிக்கப்படுகின்றன. இவை சொல்லும் கருத்துக்களும், சித்தாந்தங்களும் உள்வாங்கப்படுகின்றன எனத் தமிழ்மொழி இலக்கியங்களில் இறைத்தன்மையோடு சுட்டுகின்றார். அதேபோல் இயேசுவின் 12 சீடர்களில் ஒருவரான புனித தோமையார் 17 ஆம் நூற்றாண்டில் தமிழகம் வருகை புரிந்த பின்னர்தான் கிறிஸ்தவம் தொடர்பான மறைக்கல்வி, தத்துவ இலக்கியங்கள் உருவாகின. ராபர்ட் தே நொபிலி, வீரமாமுனிவர் ஆகிய இருவரும் தமிழ்க்கிறிஸ்தவ இலக்கிய முன்னோடிகளாகவும், பிதாமகன்களாகவும் அமைகின்றனர். இவர்களின் நீட்சியாக, கண்ணதாசனின் இயேசு காவியம், நிர்மலா சுரேஷின் இயேசு மாகாவியம், வின்சன்ட் சின்னதுரையின் புதிய சாசனம் போன்றவை கிறித்துவ இலக்கியங்களாக உருவெடுத்தன. இவ்வரிசையில் 'அகிலப் பேரொளி' எனும் காவியம் இடம் பெற்றுள்ளது மேலும் சிறப்பு என ஆசிரியரைப் பாராட்டி இந்நூலுக்கு அணிந்துரை வழங்கியுள்ளார்.

**ஆசிரியர் உரை**

கன்னட மூலத்தில் 'ஸ்ரீபுவன சோதி' என்னும் நூலை இயற்றிய பி.எஸ்.தளவாடி 1956 ஆம் ஆண்டுக்கு முன்பு தமிழகப் பகுதிகளில் வலம் வந்துள்ளார். இவர் தமிழ்க்காப்பியங்கள் மீது அளவற்ற பற்றுக் கொண்டவர். சிலம்பையும், இராமாயணத்தையும் சிறுவயதில் கேட்டு வளர்ந்ததால் இவருக்கு இலக்கியத்தினுள் தனிப்பட்ட ஈர்ப்பு ஏற்பட்டுள்ளது. நான்காம் வகுப்பு வரை மட்டும் தமிழ் படித்த பி.எஸ்.தளவாடிக்கு தமிழ்க் காவியம் ஒன்றைப் படைத்திட வேண்டும் என்ற பேராசை உதித்துள்ளது. இருப்பினும் கன்னடத்திலிருந்த இலக்கியப் புலமை தமிழ்மொழியில் இல்லாததால் வெற்றுக் கனவாய் மாறியது எனக் குறிப்பிடுகின்றார். 'ஸ்ரீபுவன சோதி' என்னும் மாபெரும் நூல் எழுந்தமைக்கான முக்கியக் காரணங்களை தன்னுடைய உரையில் ஆசிரியர் முன்வைக்கின்றார்.

- ❖ சிலப்பதிகாரம், கம்பராமாயணம் ஆகிய தமிழ் நூல்களின் அறிமுகம் ஒரு புறமும், குவெம்பு அவர்களின் 'ஸ்ரீ ராமாயணத் தரிசனம்' கன்னடக் காவியம் எனும் இருபெரும் படைப்புகளே 'ஸ்ரீபுவன சோதி' எனும் நூல் எழுதுவதற்கு அடிப்படையானது.
- ❖ மில்டனின் பாரடைஸ் லாஸ்ட், பாரடைஸ் ரிகெய்ன் நூல்களின் வாசிப்பு.
- ❖ பல்வேறு மொழிகளில் வெளியான இயேசு காவியங்களை மாணவப் பருவத்தில் படித்தது.

**இதுவரையில் அச்சில் வந்த கிறித்துவ இலக்கியங்கள்**

- ❖ தோமஸ் ஸ்டீபன் பாதிரியார் கொங்கணி - மராட்டி கலந்த மொழி கன்னட வரிசை.
- ❖ 1956 ஆம் தேவநாகரி மொழியில் எழுதப்பட்டது.
- ❖ 1615 ஆம் ஆண்டு இதன் முதல் பாகம் வெளிவந்தது.

- 1649, 1654 ஆம் ஆகிய ஆண்டுகளில் இரண்டு மற்றும் மூன்றாம் பாகம் அச்சிட்டு வெளியிடப்பட்டது.
- 1717 ஆம் ஆண்டு கிறிஸ்து பாகவதம் பாதிரி தேவாதேவசி எனும் நூல் வடமொழியில் வெளியானது இந்நூல் 3160 அடிகள் கொண்டதாகும்.
- 1846 ஆம் ஆண்டு இயேசு காவியம் சௌத்ரி புருஷோத்தமனால் தெலுங்கு மொழியில் வெளியானது.
- 1845 ஆம் ஆண்டு இயேசு கிறிஸ்து பிரபு சதகம் எனும் நூல் வெளியானது.
- 1946 ஆம் ஆண்டு ரக்ஷணா சரித்ரா எனும் நூல் வெளியானது.
- 1845 ஆம் ஆண்டு முக்தி மார்க்க பிரதர்ஷனம் எனும் நூல் வெளியானது.
- ஸ்ரீ கிறிஸ்தவ கீதா (குறுங்காவியம்) தன்ச்சிபாயி பகீரபாய் எனும் நூல் வெளியானது.
- த மான் வூ நெவர் பெய்டு, டாக்டர் கோபால் சிங் சீக்கியப் புலவர் (ஆங்கில நூல்) எனும் நூல் வெளியானது.
- கொல்கோதா, கோவிந்தபை (குறுங்காவியம்) எனும் நூல் வெளியானது.
- உம்மாள துங்க, டாண்டே வெர்ஜில் பாதிரி அர்னுஸ் (மலையாளம்) எனும் நூல் வெளியானது.
- 1746 ஆம் ஆண்டு தேம்பாவணி வீரமாமுனிவரால் வெளியானது.
- இயேசு காவியம், கண்ணதாசன் வெளிவந்தது.

மேற்சுட்டிய நூல்கள் கிறிஸ்து பற்றி எழுந்த இலக்கிய நூல்களாகும். இயேசுவைப் பற்றி தமிழில் மட்டும் 32 காவியங்கள் வெளியாகியுள்ளன. இதுவே தமிழ்மொழிக்குச் சிறப்பாகும். **“இவைகள் அனைத்தும் இந்தியப் பண்பாட்டினை உள்ளடக்கியதோடு உள்ளூர் மக்களின் பரம்பரை பரம்பரையான சம்பிரதாயங்களைக் கொண்டிருந்தன என்பது கவனத்திற்குரியது. இங்குள்ள கிறிஸ்தவர்கள் முதலில் இந்தியர்கள், இரண்டாமாகத்தான் அவர்கள் கிறிஸ்தவர்கள் என்பதை மறக்கக் கூடாது. இயேசு மேனாட்டவராயினும் அவர் ஆசியாவில் பிறந்தார் என்பதை மறக்கக்கூடாது”** என தன்னுடைய ஆசிரியர் உரையில் குறிப்பிடுகின்றார் (அகிலப் பேரொளி, ப.9)

**மூல ஆசிரியரின் தமிழ்ப்பற்று**

இந்நூலைப் படைக்கும்போது கன்னட நாட்டின் பரம்பரையை உள்ளீடாகக் கொண்ட இந்திய கிறிஸ்துவ வாசகர்களுக்கு அறிமுகம் செய்கிறேன் எனவும், கல்தோன்றி மண் தோன்றாக் காலத்திலிருந்தே தமிழானது திராவிட மொழிகளின் மூத்த மொழி, அந்த மொழியின் மகாகாவியம் மொழிபெயர்ப்பாகிருப்பது தமிழன்னையின் கருணை என்பது என் நம்பிக்கை எனத் தமிழ்மொழி மீது பற்றுடையவராகவும், மரியாதை கொண்டவராகவும் மூலநூல் ஆசிரியர் திகழ்ந்துள்ளார் என்பது புலப்படுகிறது.

**நூல் எழக் காரணம்**

ஜேம்ஸ் அருள்தாஸ் தொட்ட காஜனூர் என்னும் பகுதிக்குக் கிறித்துவ சேவையாற்ற வந்திருக்கையில், அவருக்கு உதவி செய்ய உடனிருந்தேன். அவருடன் பயணித்ததால் தமிழில் பேசிப் பழகும் வாய்ப்புக் கிட்டியது. என் வழியாக இலக்கிய நூல்கள் வெளிவர வேண்டும் என அவர் ஆவல் கொண்டதின் வாயிலாக இந்நூல் எழுதினேன். தற்போது ஜேம்ஸ் அருள்தாஸ் இம்மண்ணுலகில் இருந்திருந்தால் ஸ்ரீ புவன சோதியைக் கண்டு மகிழ்ந்திருப்பார் என வருத்தத்துடன் பதிவு செய்துள்ளார். **"மனித உள்ளங்களில் மதக் கேடுகளுக்கு இடமளிக்காமல் மனநலத்துடன் விளங்க வைக்க முடியும். இந்தக் கண்ணோட்டத்தில் ‘அகிலப் பேரொளி’ அனைவருக்கும் போய்ச் சேர வேண்டுமென எழுதினேன்"** என தனது ஆசிரியர் உரையில் குறிப்பிடுகின்றார். (அகிலப் பேரொளி, ப.9)

**மொழிபெயர்ப்பாளரை வாழ்த்துதல்**

இயேசுவைப் பற்றிய பெரிய காவியம் தமிழ்க் கிறிஸ்தவர்களின் கரங்களைச் சென்றடைய வேண்டுமென இவ்வளவு பெரிய நூலைப் பதினெட்டே மாதங்களில் இறையடியான் மொழிபெயர்த்துள்ளார். கன்னடம் மூலம் 1200 பாக்கள் கொண்ட நூலைப் படித்து அருமையாய் மொழிபெயர்த்த நிலையினை எண்ணி நினைக்கையில் மொழியின் மீதும் மொழிபெயர்ப்பின் மீதும் அவர் கொண்டுள்ள ஈடுபாடு அளப்பரியது என்பேன் என இறையடியானை வாழ்த்திக் குறிப்பிட்டுள்ளார்.

பி.எஸ்.தளவாடி இயற்றிய 'ஸ்ரீ புவன சோதி' எனும் கன்னட நூலைக், கன்னட மொழி பேசுகின்ற மக்களுக்கு மட்டும் பயன்படும்படி நிறுத்திக் கொள்ளாமல் இயேசு கிறிஸ்துவின் வாழ்க்கை இலக்கியத்தைத் தமிழில் மொழிபெயர்ப்புச் செய்தே தீர வேண்டும் என்ற சிந்தனையானது பாராட்டுதலுக்குரியது. அதுமட்டுமின்றி இளமையில் அவர் கற்றறிந்த தமிழ் இலக்கியங்களே இதற்குக் காரணம் என்றே கூறலாம்.

பி.எஸ்.தளவாடி நூலுக்கு ஆசிரியர் உரை வழங்கிய நாள் 13.6.2019 ஆகும். இந்நாள் புனித தோமையார் பிறந்தநாள் எனக் குறிப்பிட்டுள்ளார். இவற்றைப் பார்க்கும்போது கிறித்துவத்தின் மீதும் கிறிஸ்தவ சீடரான புனித தோமையார் மீதும் அவர் கொண்டிருந்த அதீத பற்றை நாம் காணமுடிகிறது.

**மொழிபெயர்ப்பாளர் உரை**

கடந்த 25 ஆண்டுகள் பல்வேறு சிறுகதை, கவிதை, கட்டுரை, புதினம், இலக்கியங்களை மொழிபெயர்த்துச் சிறப்பித்திருப்பினும், கிறித்துவ மத நூல் ஒரு சவாலாக இருந்துள்ளது என இறையடியான் தனது உரையில் குறிப்பிட்டுள்ளார்.

கிறித்துவத்துக்கும் தனக்குமான உறவுநிலையினை விளக்க முற்படுகையில், அமாவாசைக்கும், அப்துல் காதர்க்கும் என்ன தொடர்பு எனக் கேட்பது வழக்காறு. கண்ணதாசனுக்கும் இயேசு காவியத்திற்கும் உள்ள உறவு போன்றதே என் நெருக்கம் எனக் குறிப்பிடுகின்றார். கிறிஸ்துவத்திற்கும் தனக்குமான நெருக்கத்தை கீழ்வுள்ளவாறு குறிப்பிடுகின்றார்.

- ❖ ஈஸ்டர் பண்டிகையின் முதல்நாள் இரவு பூங்காவனம் நிகழ்ச்சியை எமது ஊரிலுள்ள தூய மரிய கொரற்றி சிற்றாலயத்தில் இரவு தொடங்கி விடியும் வரையில் நடத்திய பின்புலமும் எனக்குண்டு.
- ❖ இயேசுவின் பிறப்பு முதல் இறப்பு வரையிலான கதைப்பாடலாக ஒரு வித்தியாசமான நிகழ்ச்சியாக சுமார் 40 ஆண்டுகளுக்கு முன் நடந்த நிகழ்வு இன்றும் எனக்கு பசுமரத்தாணி போல நினைவில் இருக்கிறது.
- ❖ மரிய கொரற்றி சிற்றாலயத்தின் பொன்விழா நிகழ்ச்சிக்காக அன்னை மரிய கொரற்றியின் வாழ்க்கைச் சித்திரத்தைப் பாடலாக்கி ஒலிப் பேழையாகக் கொண்டு வந்ததில் என் பங்கு இருந்தது.

எனக் கிறித்துவ சமயத்தினுள் தான் ஆற்றிய பங்களிப்பினை எடுத்துரைக்கையில் கிறித்துவ சமயத்தைப் பற்றிய புரிதலுடையவராகத் தென்படுகின்றார்.

இதுவரை பைபிள் மொழிபெயர்ப்புகளைக் கால அடிப்படையிலும் மொழிகளின் அடிப்படையிலும் இறையடியான் எடுத்தியம்பியுள்ளார்.

புனித நூல்களின் மொழிபெயர்ப்பில் பைபிளுக்கு முதலிடம் உண்டு. கி.பி.1 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சீசர், ஹோரஸ் ஆகிய இருவரின் மொழிபெயர்ப்புத்தான் உலகில் முதல் மொழிபெயர்ப்பாகும். இவர்களைப் பின்பற்றி கி.பி.4-5 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ஜெரோம் எபிரேயத்திலிருந்து இலத்தீனுக்கு மொழிபெயர்த்து, ரோம் நகரின் மிகச் சிறந்த கிறிஸ்துவ அறிஞராகவும், போப்பின் செயலாளராகவும் செயலாற்றியுள்ளார். எபிரேயம், கிரேக்கம், இலத்தீன் ஆகிய மும்மொழிகளிலும் புலமைப் பெற்றமையினால் இவரின் நினைவாக

செப்டம்பர் 30 ஆம் நாளை உலக முழுவதும் மொழிபெயர்ப்பு தினமாகக் கொண்டாடப்படுகிறது.

- கி.பி.1 ஆம் நூற்றாண்டிலிருந்து நவம்பர் 2014 ஆம் ஆண்டு வரையிலும் 531 மொழிகளில் பைபிள் முழுமையாக மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.
- பைபிளில் புதிய ஏற்பாடு 1240 மொழிகளில் வெளியாகியுள்ளது.
- பைபிளின் சில பகுதிகள் மட்டும் 2883 மொழிகளில் மொழியாக்கம் செய்யப்பட்டுள்ளது.
- 1997 ஆம் ஆண்டு நவம்பரிலிருந்து 2014 நவம்பர் வரையிலான ஆண்டுகளில் மட்டும் 221 மொழிகளில் முழுமையாகவும், 1286 மொழிகளில் சில பகுதிகளாகவும் பைபிள் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.
- உலக பைபிள் சங்கம் (International Bible Society) உலகிலுள்ள 7500 மொழிகளில் பைபிளை மொழிபெயர்க்கும் திட்டத்தில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டுள்ளது.
- இந்திய மொழிகளில் தமிழில்தான் பைபிள் முதன்முதலில் மொழிபெயர்க்கப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது.

மேற்சுட்டிய வரலாற்றுப் பிண்ணனியின் நீட்சியாக பி.எஸ்.தளவாடியால் கன்னடத்தில் 'ஸ்ரீ புவன சோதி' என்னும் நூல் எழுதப்பட்டுள்ளது என இறையடியான் குறிப்பிடுகின்றார். குறிப்பாக இந்நூல் கன்னடத்தில் நான்கு பதிப்புகளாக வெளிவந்து புகழ் பெற்றதாகும்.

பழைய ஏற்பாட்டைத் தழுவி இன்றைய நிகழ்வுகளை மூல ஆசிரியர் சித்திரித்துள்ளார். அவர் பின்பற்றியதுபோல பழமையைப் புறக்கணிக்காமல் இன்றைய மொழிநடைக்கேற்ப இந்நூல் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது என மொழிபெயர்ப்பாளர் இறையடியான் குறிப்பிடுகின்றார். இந்நூலைத் தமிழில் மொழிபெயர்க்க வாய்ப்பளித்த மூலநூலாசிரியர் பி.எஸ்.தளவாடிக்கும், வாழ்த்துப்பா நல்கியவர்களுக்கு நன்றியைத் தெரிவித்துள்ளார்.

**நூல் அமைப்பு**

இந்நூலானது மூன்று பருவங்களாகப் பகுக்கப்பட்டுள்ளது.

1. **ஆதாம் பருவம்**
2. **அகிலப் பேரொளி பருவம்**
3. **பரஞ்சோதி கிறிஸ்து முனிவர் பருவம்**

**1.ஆதாம் பருவம்:**

இப்பகுதியில் 13 தலைப்புகளில் உலகில் தேவன் களிமண்ணால் படைத்த முதல் மனிதனான ஆதாம் வாழ்வியலைப் பேசுவதாக அமைந்துள்ளது. உலக கவிகளின் பாதையில் நிலைக்க வைப்பீர், விடியட்டும் என்ற புனிதக்குரல், தேவ தூதர்களின் இடையே பகைமை, மந்திராலோசனையின் சபையில், பூமிக்குத் தாவிய வஞ்சகன், தெய்வ முற்றத்தில் இடறி விழுந்தாலும் வெற்றியே, மோகக் கனிக்கு எத்துனை வனப்பு?, சாபத்துக்கு ஆட்பட்ட ஆதியின் பெற்றோர்கள், உலகப் பிரளயம், மகனைக் கொல்ல முயன்றானா பக்தன், ஆண்மக்கள் இருவரையும் அவர்கள் கொல்லவில்லை, சர்வேசுவரனின் பத்துக் கட்டளைகள், தேவமகிமை வெல்லட்டும்! தேவ மக்கள் வாழட்டும்! என 13 தலைப்புகளில் இப்பருவம் அமைகின்றது.

**2.அகிலப் பேரொளி பருவம்**

இரண்டாவதாக அமைந்த இப்பருவத்தில் 40 தலைப்புகளில் இயேசு கிறிஸ்து ஆற்றிய இறைப்பணியையும், அற்புதங்களையும், அவரது பாடுகளையும் விளக்கி நிற்கின்றன. இரட்சகரின் விருப்பம், துக்கத்துள் கலக்கத்துள் புண்ணியவதி நீ!, தெய்வக் கருணையால் மங்களத் திருமணம், மந்திர நல்லுரையைவிட உயர்ந்த குழந்தை, மங்கலப்பாடலை வர்ணிப்பது

எங்ஙனம்!, இரவில் தோன்றியவருக்குப் பேரொளி, மழலையரின் மரணங்களில் வெங்குருதி ஊற்றெடுத்தது, ஊர் மக்களுக்கு அனுதவொளியான இயேசு, அறிவின் வடிவமான இயேசு புனிதப் பிறவியாம், குருவுக்குத் தீட்சையளித்த யோவான், செதுக்கிய சிற்பம்போல் காட்சியளித்தானோ?, சீடர்கள் பன்னிருவரை வாழ்த்துதல், மண்ணுலகோர் உன்னால் மகிழ்ச்சி துய்க்கட்டும், எந்தையின் ஆலயத்தைச் சந்தையாக்கி விடாதீர்கள், என்மக்கள் உன்மக்கள் என்பதேது?, சமேரியாவின் மகளே புண்ணியவதி நீ, அற்புதமன்று பரமாத்மாவின் கருணையது, தீதென எண்ணாமல் அன்பைப் பொழிவாய்!, கண்டனர் கண்ணிமைக்காமல் வியப்பான பணிகளை, செவிமடுத்தோரின் விமர்சனங்களுக்கு இடமளித்தார், நண்பனின் கொலைச் செய்தி, இறைவனோடு இணைந்த இரக்கமுடையோர், கருணை வள்ளலை மறந்தது, அன்பு நண்பனே எழுந்து வா, இவனுக்கு இணை இத்தரையில் வேறுயாருமிலர், இசுரவேல் அரசனுக்கு வெற்றி உண்டாகட்டும், பஸ்கா பெருவிழாவுக்கு அணியமானது சுகன்யாநகர், யூதாஸ் மனத்துள் இருந்த கனல், பஸ்கா பண்டிகையின் அமுதுண்டார் சீடரொடு, நானே அவன் நாசரேத்தின் இயேசு, புனித நீராடி புவியைப் புரக்க வந்தவன் நீதானோ!, கணவனை இயக்கிய காரிகை புரோகியுவா, நானே கலிலேயாவின் மன்னனெனத் தெரியுமா உனக்கு?, இயேசு இவர், யூதர்களின் மன்னன், தேவனே! தேவனே! என்னையேன் கைவிட்டீர்?, மரியாளின் அழுகை, எமனை வென்றவர் எழுந்து வந்தார், தரிசனம் காட்டிடுவாய் முதலில் எனக்கு, வெள்ளித் தேரில் ஏறியது என்ன மாயமோ? என 40 தலைப்புகளில் இயேசு கிறிஸ்து வாழ்வில் நடந்த சம்பவங்கள் முதல் சிலுவையில் அறையப்படுதல் வரையிலான காட்சிகளோடு இப்பருவம் அமைகின்றது.

**3.பரஞ்சோதி கிறிஸ்து முனிவர் பருவம்**

நிறைவாக அமைந்துள்ள இப்பருவத்தில் 11 தலைப்புகள் அமைந்துள்ளன. பேரொளியின் காட்சி, வானுலக பேரரசின் திறவுகோல், என் மந்தைகளை மேய்க்க வேண்டும், அல்பாயாவின் மத்தேயு எழுந்து வா!, இடியின் மைந்தரும் மின்னலின் மறிகளும், உறைந்த கடலின் இறந்த மீன்கள், உலகை உய்விக்கப் புனித நீராடியவர், கண்ட இடங்களில் துண்டுதுண்டாக வெட்டினர், அன்பெனும் நூல் வலை, கிறிஸ்தவரில்லாத ஊரில்லை ஏசு கிறிஸ்துயில்லாத உலகில்லை, ஆதியும் அந்தமும் நானல்ல எனும் தலைப்புகளுடன் இந்நூல் நிறைவடைகின்றது.

**பா அடிகளும் அமைப்புகளும்**

அகிலப் பேரொளி எனும் இந்நூல் மூன்று பருவங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. முதற்பருவமான ஆதாம் பருவத்தில் 5729 அடிகளும், இரண்டாம் பருவமான அகிலப் பேரொளி பருவத்தில் 16460 அடிகளும், இறுதிப்பருவமான பரஞ்சோதி கிறிஸ்து முனிவர் பருவத்தில் 4267 அடிகளென மொத்தம் 26,456 அடிகள் உள்ளன.

ஆதாம் பருவத்தில் தொடக்கப் பாடலாக இறைவனைப் போற்றும் முகமாக இயேசுவின் நாமத்தையும், இயேசுவைப் போற்றிப் புகழ்ந்து பாடும் விதமாக அமைந்துள்ளது. இதனை,

> **"மேன்மைமிகு இயேசுவே சகாப்த நாயகனே!**
> **அமுது மயமானவனே விண்ணின் மைந்தனே!**
> **அன்னை மரியாளின் அன்புப் பாலகனே! புதல்வனே!**
> **அகிலம் போற்றும் தேவியின் புனிதனே!**
> **அவதார திலகமே கருணையின் கடலே!**
> **பரமனின் பாதக் கமலத்தில் சிரம்வைத்து**
> **தயை வேண்டுமெனத் தொழுதேன்;"** -(ஆதாம் பருவம்: 1-7)

எனும் பாடல் மூலம் அறியலாம்.

கன்னட நாட்டின் அடியார்களின் பெயர்களைச் சுட்டி, இராமாயண தரிசனமெனும் மாகாவியம் தொழுது முன்மாதிரி ஆக்கினேன். இக்காவியத்திற்கு இயேசு இறைபெருமானை கண் ஆவாய்,

வாய் ஆவாய், கன்னடியர் இதயத்தில் வைரகோபுரமாகு, உயர்ந்தோனாகு என்பதுடன் என் கால் இடறாமல் காத்தருள வேண்டுமென விண்ணப்பம் வைக்கின்றார். இதனை,

**"மாதரசா, அரளய்யா, சவுடய்யா**
**கின்னரி மொம்மய்யா, மோளிகே மாரய்யா**
**மடிவாள மாச்சய்யா, சுக்கய்யா**
**மேதார கேதய்யா, இராயசத மஞ்சய்யா,**
**சென்ன பசவண்ணா, கொங்கின மகாதேவி**
**கேளிகய மகாதேவி, கொட்டணத சோமம்மா,**
**பிட்டம்மா, இலக்கம்மா, திம்மம்மா, நாகம்மா**
**அக்கமகாதேவி போன்ற அடியார்களில் அனைவருக்கும்**
**குலம் ஒன்றே என்றுரைத்தவனே**
**காவிய உழவில் உழுதுவிதைத்து அணியாக்கிவிடுவாய்,**
**அண்ணனே, பசவண்ணனே!"** -(ஆதாம் பருவம்: 95-106)

எனவும்,

**"கன்னடியர் இதயத்தில் வைரகோபுரமாகு, உயர்ந்தோனாகு!**
**இன்பப்பாதையில் நடக்கிற**
**என்னை இடறிவிழாமல் செய்திடுவாய்!"** -(ஆதாம் பருவம்: 16-18)

எனும் அடிகளில் கன்னட நாட்டின் மக்களின் மனத்தில் இறைமகனாகிய இயேசு பெருமானே அமருவாயாக எனப் பாடியுள்ளார்.

**அடிக்குறிப்பு**

நவீன பாவிகமாய்க் காணலாகும் இம்மொழிபெயர்ப்பில் பல இடங்களில் அடிக்குறிப்புகள் சுட்டப்பட்டுள்ளன. 194, 195, 215, 216, 289, 347, 348, 352, 376, 379, 382, 414, 448, 451, 470, 472, 510, 511, 513, 538, 551, 557, 559, 572, 684, 741, 752, 803, 835, 844, 847, 860, 861 ஆகிய முப்பத்து மூன்று இடங்களில் வாசகர்கள் மற்றும் ஆய்வாளர்கள் தெளிவுறும் நோக்கில் அடிக்குறிப்புகள் கொடுக்கப்பட்டுள்ளன. சான்றுகள் சில பின்வருமாறு:

- **வசுதை:** தேவதைகளில் ஒரு பிரிவு (ப.194),
- **ஹூக்கி:** அரிசி பருப்பு கலந்த உணவு (ப.215)
- **மன்றல்நிறை:** நறுமணமிக்க (ப.289)
- **மெஸ்ஸாயா:** இரட்சகன் அல்லது உலகை உய்வித்தவன், கிறிஸ்து எனப் பொருள். கிரேக்க மொழியில் 'கிறிஸ்தோஸ்' என்றால் கிறிஸ்து மற்றும் மெஸ்ஸாய எனப் பொருள் (ப.348)
- **பரிசேயர்:** மோசசு அருளிய அறக்கட்டளையைச் சம்பிரதாயமாய் வரும் நியமங்களைக் கட்டுப்பாட்டுடன் கடைப்பிடித்து அதனையே போதிக்கும் குழுவினர். இவர்களின் எல்லை மீறிய தூய்மையை இயேசு கண்டித்துள்ளார் (ப.376)
- **மன்னா:** பாலைவனத்தில் பயணம் செய்தபோது இசுரயேலர்களுக்கு, இறைவன் கொடுத்த உணவு. இது பொரித்த சோளம் போன்றது (ப.414)
- **சதுசேயர்:** யூதர், கலிலேயர் போன்ற ஒரு வம்சாவழியினர் (ப.470), **புங்கம்:** அம்பு (ப.472)
- **மெசியா:** இரட்சகன் அல்லது உலகக் காப்பாளன் கிறிஸ்து எனப் பொருள். கிரேக்க மொழியில் கிறிஸ்த்தோஸ் என்றால் புனித நீரில் நீராடியவன் (புனிதன்) எனப் பொருள் (ப.513) என்பன.

**பன்மொழிப் பாக்களை எடுத்தியம்பல்**

இனம் | INAM (IIETS)
E-ISSN: 2455 - 0531 | UAN: TN0300061112
மலர் : 10 | இதழ் : 38 | மே | 2024 | Vol.: 10 | Issue: 38 | May | 2024

அகிலப் பேரொளி எனும் இம்மொழிபெயர்ப்புநூல் நவீன பாவிகத்தால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. இம்மொழிபெயர்ப்பில் கன்னடம், பழங்கன்னடம், வடமொழி, ஆங்கிலம், தெலுங்கு, கொங்கணி ஆகிய மொழிகள் காணலாகும் பாக்களும் இடம்பெற்றுள்ளன.

**கன்னடம்**

பரஞ்சோதி கிறிஸ்து முனிவர் பருவம் எனும் மூன்றாம் பருவத்தில், ஆதியும் அந்தமும் நானல்ல எனும் பகுதியில் பழங்கன்னடத்தில் கொடுக்கப்பட்டுள்ளது. அதனை,

**"ஸ்ரீ ஜனர்ஜிதா சத்ய சாட்சியே**
**பூஜனையோக குருவே, தேவஜ**
**ராஜிபதனி ரவியே, சுபதவே, ஜீவனதிபதியே**
**தேஜதுதயவே, தேவகாந்தியே,**
**மூஜகன்னாதேசு நின்முக**
**மாஜிகொள்ளதே மூடுபக்தர ஹீருதய கமலதோளு**

**ஸ்ரீ மஹந்தனே, தேவதத்தனே,**
**சாமகர்த்தனே, ஷீத்தயக்ஞனே**
**நேமதந்தியனே, விஜயஷாலியே பாபரிஹரனே**
**பிரேமதப்தியே, மனுஜபுத்ரனே**
**ராமணீயகே சகனே நின்னய**
**நாமதுன்னதி யாரு நுடிதாரதுல ஷௌச்சிதனே"** -(ஆதியும் அந்தமும் நானல்ல:330-342)

எனும் பாக்கள் வாயிலாக அறியலாம். அதேபோல், கன்னடத்தில்,

**"பரம பாவன பிதகே சரணம்**
**பரம குரு புத்ரனிகே சரணம்**
**பரம பாவன ஆத்மனிகே சதசரணு சத சரணம்**
**சரணமமலாபதிகே சரணம்**
**சரணமருள ஸ்நானிகப்பகே சரணு சத சரணம்!!**

**தேஷனூரின் கடத பார்ஷவதோ**
**னிருவ சர்வேஷ்வரன் குடியோன்**
**ஜேஸ்ட மாசதி சுக்லபஷத தஷம் திவசதவி**
**உபய சங்கடகொண்டு மனதோளு**
**அபய வசனத நெரவ கோருத்தா**
**பக்தனோர்வனு பந்து நிந்தனு சஞ்சே சமயதவி!!"** (ஆதியும் அந்தமும் நானல்ல:461-473)

எனும் 'சத்யவேதாம்ருதசார' எனும் காவியம் படைத்த சுவாமி அமலானந்த குருவின் வரிகளை எடுத்துக்காட்டியுள்ளார். இவர் இயேசுவின் வாழ்க்கையை கன்னட மொழியின மக்களுக்கு கன்னட மொழியில் கொண்டு சேர்த்தவர் என்பது குறிப்பிடத்தக்கது.

**சமஸ்கிருதம்**

அகிலப் பேரொளி பருவம், செதுக்கிய சிற்பம்போல் காட்சியளித்தானோ? எனும் உட்தலைப்பில், மலையின்மீது இயேசு நாற்பது நாள் தனித்திருந்து உபவாசமிருந்தார். அப்பொழுது பிசாசு இயேசுவை சோதித்தறிய வந்திருந்தான். இயேசுவைப் பார்த்து நீ தேவனுடைய குமாரனெனில் இந்தக் கற்களை அப்பமாக மாற்று எனச் சவால் விட்டான். இதனைக் கேட்ட இயேசு, அப்பாலே

போ சாத்தனே எனக் கூறினார். அதனை எடுத்துரைக்கும் முகமாக இப்பகுதி அமைந்துள்ளது. அதனை மொழிபெயர்ப்பாளர் கன்னட வரிகளில் சுட்டிக் காட்டியுள்ளார். அதனை,

**"அஸ்யதி இதி அகஹ ப்ர அனிதி**
**இதி பிராணஹ பரபிரம்மனே அன்னம்**
**அன்னமே பரபிரம்மம்"** -(அகில பேரொளி பருவம்: 218-221)

**"நனு வாச்சஹ பிராணபிரேரிதவாதாட்ரண**
**தியானமேவ பாஷஸ்த மித்யா ஷங்க**
**வஸ்துத்வ விஜாரேண ததாத்துவே பி**
**சம்ஹிதாயாம் வாச்சஹ பிராத்யா**
**சத்திமன்வயவ்ய தீரே காப்யாந்தர் ஷய திசுத்தஸ்யாம்**
**வாக்சம்ஹிதாயமிய முயத்திருஜ்யத**
**இதி ஷேஷஹ"** - (அகிலப் பேரொளி பருவம்: 222-229)

எனும் அடிகளில் எடுத்துக் கூறியுள்ளார்.

வடமொழியில் 'கிறிஸ்து பாகவதம்' எனும் காவியத்தை எழுதிய பி.சி.தேவசியா என்பவரின் பாடலைச் சுட்டியுள்ளார். அதனை,

**"ஓம் நமோ விஷ்வபரிதா**
**தேவா பாபா சர்வ சமர்த!**

**பரமேஷ்வர சத்யவந்தா**
**சுவர்க புருத்விஜா ஏசநாரா!**

**தும் குத்திசித்திஜா தாதாரு**
**குருபாநிதி கருணாகரு!**

**தும் சர்வ சுகாஜா சாகரு**
**ஆதி அந்து நாடுடே!**

**தும் பரமானந்து சர்சுவரூபு**
**விஷ்வவியாபகு ஞானதீபு!**

**தும் சர்வகுணம் நிர்லேபு**
**நிர்மலு நிர்விகாரு சுவமியா!**

**தும் அத்ருஷ்டி தும் அவ்யக்து**
**சமதயாளு சர்வபிராப்து!**

**சர்வஞானி சர்வநித்யந்து**
**யெகுஜி தேவோ தும்!"** (ஆதியும் அந்தமும் நானல்ல: 175-189)

எனும் பாடலடிகள் மூலம் அறியலாம்.

**தெலுங்கு**

தெலுங்கு மொழி இலக்கியப் பாடலையும் எடுத்துரைத்துள்ளார். இதனை,

**"இயேசு நாயகுனி இயேசுகிறிஸ்து பிரபு**
**யெனு ரண்டு விதகம்பு லோனர மொதவட**
**ரஜியிம்பபகே வென்க ரக்ஷண சுசரித்ர**
**பிரகரணதீரயமுக ரஜிதமய்யே**

**ததநந்தரமுன விஸ்தர ரத்னாகரம்**
**பனு கிரந்தமொகடி செயலக்படிமே**
**தருவாத பஞ்சாமர பன்னமுலு வென்க**
**பஞ்சரத்னமு வல்லபடியே நெலமி**

**வெடிக முந்தட பெக்கு கீர்த்தனலு பத்ரி**
**கலனு ரஜியிம்படி கிறிஸ்து கருணஜேத**
**கடனு கிரைஸ்தவ நீதி பிரகாஷமனேடு**
**நீ சரித்திரம்பு ரஜியிம்ப நிஷ்டமய்ய"** -(ஆதியும் அந்தமும் நானல்ல:295-306)

எனும் அடிகளில் எடுத்துக் கூறியுள்ளார்.

**ஆங்கிலம்**

ஆங்கில மொழி இலக்கியப் பாடலையும் எடுத்துரைத்துள்ளார். இதனை,

**ஆஃப் மியான்ஸ் ஃபர்ஸ்ட் டிஸ்ஒபிடியன்ஸ்,**
**அண்ட் தி டிரௌட் ஆஃப் பொர்படன்,**
**ட்கீ ஹவுஸ் மார்டல் டேஸ்ட் பிராட்,**
**டெத் இண்டு தி வெர்லட் அண்ட் ஆல்,**
**அவர் ஓ வித், லாஸ் ஆந்ப் ஈடன்,**
**டெல் ஒன் கிரேட்டர் மயான் ரெஸ்ட்டோர்,**
**ஆங், அண்ட், ரீகெய்ன் தி பிளிஸ்ஃபுல்,**
**சீட், சிங், ஹவன்லி முயூஸ்...,** -(ஆதியும் அந்தமும் நானல்ல:98-105)

**கொங்கணி**

கொங்கணி மொழியில், பழைய ஏற்பாட்டின் பகுதிகளைக் காவியமாக்கிய 'திவ்யாம்ருதா' எனும் நூலை எழுதிய கொங்கணி மொழி கவிஞர் ஜி.பி.மொரேயாசின் பாடலைக் கையாண்டுள்ளார். இதனை,

**"ஈதேன் உத்யான் புமிர் வைகுண்ட**
**கீதேம் நாதம்மய் தே கோங்க்**
**சர்காவவய்லெம் தர்யாசார்கேம்**
**சுக்தம்மய் மேஷாத் ச்சாகோங்க்**
**திஸ்தா பாச்விசுருஷ்டி சக்பி தஞ்டாய்**
**ஆஹ்லாத் மதிக**
**புலாம் பாச்சி சுருஷ்டி சக்பி தஞ்டாய்**
**ஆஹ்லாத் மதிக்**
**புலாம் ரங்காள் பனாம் ரோசாள்**
**மௌவித் திசாக் ராதிக்**
**வாகா ஷிம்வாம் கோர்வாம் மெர்வாம்"** -(ஆதியும் அந்தமும் நானல்ல:420-430)

கன்னட மூலத்தைத் தமிழில் மொழிபெயர்க்கப்பட வேண்டுமென அவாக் கொண்ட மூல நூலாசிரியர் பி.எஸ்.தளவாடி விருப்பத்தை நிறைவேற்றிய இறையடியானின் மொழிபெயர்ப்புப் பணி போற்றத்தக்கது. பொறுமை என்பது மொழிபெயர்ப்பாளருக்கு முக்கிய தகுதியாகும். மிகப்பெரிய கன்னட மூலமான ஸ்ரீபுவன சோதி எனும் நூலைத் தமிழில் அழகுபட மொழிபெயர்த்துள்ள மொழிபெயர்ப்பாளர் இறையடியானின் பணி போற்றத்தக்கது. இருப்பினும் இன்றையச் சூழலில் மொழிபெயர்ப்பாளர் இறையடியான் இவ்வுலகில் இல்லாதிருப்பது கன்னட-தமிழ்ச் சமூகத்திற்கு பேரிழப்புத்தான் எனலாம்.

## துணைநூற்பட்டியல்

1. தளவாடி பி.எஸ். (மூ.ஆ), இறையடியான் (மொ.ஆ), அகிலப் பேரொளி, (இறைமகன் இயேசுவின் நவீன பாவிகம்), 2019, அன்னபூர்ணா பதிப்பகம், தாசரஹள்ளி, பெங்களூரு.
2. முனியசாமி சே., இறையடியான், 2015, கலைஞன் பதிப்பகம், சென்னை.

**பின்னிணைப்பு - நூல் பகுப்பு அட்டவணை**

| வ.எண் | பருவம் / தலைப்பு | பா அடி |
|---|---|---|
| | **அ)ஆதாம் பருவம்** | |
| 1. | உலக கவிகளின் பாதையில் நிலைக்க வைப்பீர் | 452 |
| 2. | விடியட்டும் என்றது புனிதக் குரல் | 708 |
| 3. | தேவ தூதர்களின் இடையே பகைமை | 882 |
| 4. | மந்திராலோசனையின் சபையில் | 441 |
| 5. | பூமிக்குத் தாவிய வஞ்சகன் | 301 |
| 6. | தெய்வமுற்றத்தில் இடறி விழுந்தாலும் வெற்றியே | 448 |
| 7. | மோகக் கனிக்கு எத்துனை வனப்பு? | 400 |
| 8. | சாபத்துக்கு ஆட்பட்ட ஆதியின் பெற்றோர்கள் | 400 |
| 9. | உலகப் பிரளயம் | 257 |
| 10. | மகனைக் கொல்ல முயன்றானா பக்தன் | 253 |
| 11. | ஆண்மக்கள் இருவரையும் அவர்கள் கொல்லவில்லை | 295 |
| 12. | சர்வேசுவரனின் பத்துக் கட்டளைகள் | 672 |
| 13. | தேவமகிமை வெல்லட்டும்! தேவமக்கள் வாழட்டும்! | 220 |
| | **ஆ)அகிலப் பேரொளி பருவம்** | |
| 14. | இரட்சகரின் விருப்பம் | 412 |
| 15. | துக்கத்துள் கலக்கத்துள் புண்ணியவதி நீ! | 435 |
| 16. | தெய்வக் கருணையால் மங்களத் திருமணம் | 265 |
| 17. | மந்திர நல்லுரையைவிட உயர்ந்த குழந்தை | 211 |
| 18. | மங்கலப்பாடலை வர்ணிப்பது எங்ஙனம்! | 198 |
| 19. | இரவில் தோன்றியவருக்குப் பேரொளி | 748 |
| 20. | மழலையரின் மரணங்களில் வெங்குருதி ஊற்றெடுத்தது | 401 |
| 21. | ஊர் மக்களுக்கு அனுதவொளியான இயேசு | 533 |
| 22. | அறிவின் வடிவமான இயேசு புனிதப் பிறவியாம் | 419 |
| 23. | குருவுக்குத் தீட்சையளித்த யோவான் | 485 |
| 24. | செதுக்கிய சிற்பம்போல் காட்சியளித்தானோ? | 420 |
| 25. | சீடர்கள் பன்னிருவரை வாழ்த்துதல் | 399 |
| 26. | மண்ணுலகோர் உன்னால் மகிழ்ச்சி துய்க்கட்டும் | 412 |
| 27. | எந்தையின் ஆலயத்தைச் சந்தையாக்கி விடாதீர்கள் | 288 |
| 28. | என்மக்கள் உன்மக்கள் என்பதேது? | 167 |
| 29. | சமேரியாவின் மகளே புண்ணியவதிநீ | 262 |
| 30. | அற்புதமன்று பரமாத்மாவின் கருணையது | 386 |
| 31. | தீதென எண்ணாமல் அன்பைப் பொழிவாய்! | 231 |
| 32. | கண்டனர் கண்ணிமைக்காமல் வியப்பான பணிகளை | 407 |

| | | |
|---|---|---|
| **33.** | செவிமடுத்தோரின் விமர்சனங்களுக்கு இடமளித்தார் | 666 |
| **34.** | நண்பனின் கொலைச் செய்தி | 306 |
| **35.** | கருணை வள்ளலை மறந்தது | 364 |
| **36.** | உலக மேன்மைக்காகத் தேவமகனுரைத்த கதைகள் | 459 |
| **37.** | கருணை வள்ளலை மறந்தது | 281 |
| **38.** | அன்பு நண்பனே எழுந்து வா | 633 |
| **39.** | இவனுக்கு இணை இத்தரையில் வேறுயாருமிலர் | 735 |
| **40.** | இசுரவேல் அரசனுக்கு வெற்றி உண்டாகட்டும் | 461 |
| **41.** | பஸ்கா பெருவிழாவுக்கு அணியமானது சுகன்யாநகர் | 335 |
| **42.** | யூதாஸ் மனத்துள் இருந்த கனல் | 530 |
| **43.** | பஸ்கா பண்டிகையின் அமுதுண்டார் சீடரொடு | 515 |
| **44.** | நானே அவன் நாசரேத்தின் இயேசு | 385 |
| **45.** | புனித நீராடி புவியைப் புரக்க வந்தவன் நீதானோ! | 674 |
| **46.** | கணவனை இயக்கிய காரிகை புரோகியுவா | 357 |
| **47.** | நானே கலிலேயாவின் மன்னனெனத் தெரியுமா உனக்கு? | 194 |
| **48.** | இயேசு இவர், யூதர்களின் மன்னன், | 517 |
| **49.** | தேவனே! தேவனே! என்னையேன் கைவிட்டீர்? | 533 |
| **50.** | மரியாளின் அழுகை | 257 |
| **51.** | எமனை வென்றவர் எழுந்து வந்தார் | 311 |
| **52.** | தரிசனம் காட்டிடுவாய் முதலில் எனக்கு | 661 |
| **53.** | வெள்ளித் தேரில் ஏறியது என்ன மாயமோ? | 207 |
| | **இ)பரஞ்சோதி கிறிஸ்து முனிவர் பருவம்** | |
| **54.** | பேரொளியின் காட்சி | 269 |
| **55.** | வானுலகப் பேரரசின் திறவுகோல் | 285 |
| **56.** | என் மந்தைகளை மேய்க்க வேண்டும் | 224 |
| **57.** | அல்பாயாவின் மத்தேயு எழுந்து வா! | 290 |
| **58.** | இடியின் மைந்தரும் மின்னலின் மறிகளும் | 261 |
| **59.** | உறைந்த கடலின் இறந்த மீன்கள் | 255 |
| **60.** | உலகை உய்விக்கப் புனித நீராடியவர் | 390 |
| **61.** | கண்ட இடங்களில் துண்டு துண்டாக வெட்டினர் | 188 |
| **62.** | அன்பெனும் நூல் வலை | 816 |
| **63.** | கிறிஸ்தவரில்லாத ஊரில்லை<br>ஏசு கிறிஸ்துயில்லாத உலகில்லை | 737 |
| **64.** | ஆதியும் அந்தமும் நானல்ல | 552 |
| | மொத்தப் பா அடிகள் 5729+16460+4267= | **26,456** |

இனம் | INAM (IIETS)
E-ISSN: 2455 - 0531 | UAN: TN0300061112
மலர் : 10 | இதழ் : 38 | மே | 2024 | Vol.: 10 | Issue: 38 | May | 2024

# கோவலன் - கவுந்தியடிகள், மாடலமறையோன் உறவும் இன்னபிறவும் : ஒரு வாசிப்பு Kovalan - Kavunthiyadikal, Madalamaraiyon Relationship and etc., – A Reading

**ஆ. சந்திரன் | A. Chandiran[1]ORCID**

[1]உதவிப் பேராசிரியர், தமிழ் முதுகலை மற்றும் ஆய்வுத்துறை, தூயநெஞ்சக் கல்லூரி (தன்னாட்சி), திருப்பத்தூர், திருப்பத்தூர் மாவட்டம். Assistant professor, Department of Tamil PG & Research, Sacred heart college (Autonomous), Tirupattur, Tirupattur Distirct. Chandiranacn@gmail.com, **DOI: 10.5281/zenodo.11316120**

**ஆய்வுச்சுருக்கம் (Abstract)**

செய்தவம் இல்லோர்க்குத் தேவர் வரம் கொடார் என்பது காப்பியத்தில் ஒரு நியதியாகச் சுட்டப்பட்டுள்ளது. அதனால்தான் கோவலனின் தாயார், கண்ணகியின் தாயார் மாதரி முதலானோர் சொர்க்கம் அடையவில்லை என்று கூறப்படுகிறது. தன்னுடைய வினைப்பயனால்தான் சொர்க்கம் சென்றதுடன் தன் மனைவி கண்ணகியையும் உடன் அழைத்துச் சென்றான் கோவலன்.

கோவலன் இறந்தான், சாமியாக வரவில்லை. கோவலன் கண்ணகிக்கு வழித் துணையாக வந்த கவுந்தியடிகள் கோவலன் இறப்பை நினைத்து வருந்தி உண்ணாநோன்பு இருந்து இறந்தாள். அவளும் சாமியாக வரவில்லை. ஆனால் கண்ணகி சாமியாக வருகிறாள்.

இஃது ஒருபுறம் இருக்க, மாலதியின் மாற்றாள் மகவு பால்விக்கி இறக்க, பல்வேறு கோயில்களைத் தேடிச் சென்ற அவள் இறுதியாகப் பாசண்டச்சாத்தன் என்பவன் மூலமாகக் குழந்தையை மீண்டும் (சாத்தனே குழந்தையாக) பெறுகிறாள். குழந்தையாக வருகின்ற அப்பாசண்டச் சாத்தன் பின்னாளில் வளர்ந்து வாலிபனாகித் தேவந்தி என்ற பார்ப்பனியைத் திருமணம் செய்து கொள்கிறான். சில அண்டுகளுக்குப் பிறகு அவன் தீர்த்த யாத்திரை சென்று விடுகிறான். இப்படிச் சென்ற அவனும் பின்னர் தேவந்தியின் மீது சாமியாக வருகிறான். இந்த இரண்டு இணைவுகள் நடைபெறுவதன் பின்புலத்தில் உள்ள முரண்பாடுகள் குறித்தும் அவற்றிற்கான காரணங்கள் குறித்தும் விரிவான விளக்கங்களை அறிய வேண்டியுள்ளது. அவை குறித்து விரிவாக அறிய முயல்கிறது இந்தக் கட்டுரை.
It is written as a canon in the Kappiyam that God gives grace to those who have no works. That is why it is said that Kovalan's mother Kannagi's mother Mathari etc. did not reach heaven. Kovalan went to heaven due to his actions and took his wife Kannaki with him.

Kovalan died and did not come as Sami. The Counties who accompanied kovalan Kannagi mourned the death of kovalan and died fasting. She also did not come as Sami. But Kannagi comes as Sami.

Apart from this, after searching various temples to kill Malathi's substitute Magau Palviki, she finally gets the child back (as Satan himself) through Basanta Satan. Appasanda Satan, who comes as a child, later grows up and marries a seer named Devanti. After a few years he goes on a pilgrimage. Having gone like this, he also later comes as Sami on Devanti. The contradictions behind these two mergers and their reasons need to be explained in detail. This article tries to know about them in detail.

**திறவுச்சொற்கள் (Keywords):** சிலப்பதிகாரம், கோவலன், கண்ணகி, மாடலமறையோன், கவுந்தியடிகள், மணிமேகலை.

இனம் | INAM (IIETS)
E-ISSN: 2455 - 0531 | UAN: TN0300061112
மலர் : 10 | இதழ் : 38 | மே | 2024 | Vol.: 10 | Issue: 38 | May | 2024

**முன்னுரை**

கோவலன் இறந்தான் சாமியாக வரவில்லை. கோவலன் கண்ணகிக்கு வழித் துணையாக வந்த கவுந்தியடிகள் கோவலன் இறப்பை நினைத்து வருந்தி உண்ணா நோன்பு இருந்து இறந்தாள். அவளும் சாமியாக வரவில்லை. கோவலன் செய்த புண்ணியத்தின் பலனால்தான் கண்ணகி சொர்க்கம் அடைந்தாள் என்றுதான் காப்பியத்தில் கூறப்பட்டுள்ளது. அதாவது, செய்தவம் இல்லோர்க்குத் தேவர் வரம் கொடார் என்பது இங்கு ஒரு நியதியாகச் சுட்டப்பட்டுள்ளது. அதானால்தான் தன்னுடைய வினைப்பயனால்தான் சொர்க்கம் சென்றதுடன் தன் மனைவி கண்ணகியையும் வந்து உடன் அழைத்துச் சென்றான் கோவலன். இந்தப் பின்புலத்தில் பார்க்கிறபொழுது, தேவந்தியின் மீது கண்ணகி சாமியாக வருவது என்பது எப்படி என்ற கேள்வி எழுகிறது.

இஃது ஒருபுறம் இருக்க, மாலதியின் மாற்றாள் மகவு பால்விக்கி இறக்க, பல்வேறு கோயில்களைத் தேடிச் சென்ற அவள் இறுதியாகப் பாசண்டச் சாத்தன் என்பவன் மூலமாக குழந்தையை மீண்டும் (சாத்தனே குழந்தையாக) பெறுகிறாள். குழந்தையாக வருகின்ற பாசண்டச் சாத்தன் பின்னாளில் வளர்ந்து வாலிபனாகித் தேவந்தி என்ற பார்ப்பனியைத் திருமணம் செய்து கொள்கிறான். சில அண்டுகளுக்குப் பிறகு அவன் தீர்த்த யாத்திரை சென்று விடுகிறான். இப்படிச் சென்ற அவன்தான் பின்னர் தேவந்தியின் மீது சாமியாக வருகிறான். ஒருபுறம் கண்ணகி சாமியாக வருகிறாள். மறுபுறம் இந்தச் சாத்தன் சாமியாக வருகிறான். இங்கே இந்த இரண்டு இணைவுகள் நடைபெறுவதன் பின்புலம் குறித்து நாம் நுட்பமாகக் கவனிக்க வேண்டி உள்ளது.

அஃதாவது, ஒருபுறம் செய்வினை இல்லோர்க்குத் தேவர் வரங்கொடார் என்று சொல்லப்படுவதும் அந்த செய்வினைப் பயன் இன்மை காரணமாகத்தான் கோவலனின் தாயார் கண்ணகியின் தாயார் மாதரி முதலானோர் சொர்க்கம் அடையவில்லை என்று கூறப்படுவதும், மறுபுறம் இதேநிலையைச் செய்யாத கண்ணகி, கோவலன் செய்த வினைப்பயனால் சொர்க்கம் அழைத்துச் செல்லப்பட்டான் என்று கூறப்படுவதும் முரண்பாடாக உள்ளது. இந்த முரண்பாடுகளுக்கான காரணங்கள் குறித்த விரிவான விளக்கங்களை அறிய முயல்கிறது இந்தக் கட்டுரை.

**சேரன் செங்குட்டுவன் - மாடலமறையோன் சந்திப்பின் பின்புலம்**

காப்பியத்தில் சேரன் செங்குட்டுவன் - மாடலமறையோன் சந்திப்பு இமயமலையில் நடைபெறுகிறது. அதுவும் போர்க்களத்தில் அந்தச் சந்திப்பு நிகழ்வது குறிப்பிடத்தக்கது.

> 'வாழ்க என் கோவே மாதவி மடந்தை
> கானற் பாணி கனக விசயர்தம்
> முடித்தலை நெரித்தது. ……' (சிலம்பு.27:48-51)

என்று போர்க்களத்தில் இருக்கும் சேரனிடம் தன்னுடைய உரையாடலைத் தொடங்கும் மாடல மறையோனின் சாதுரியமான பேச்சின் பின்புலத்தையும் நாம் கவனிக்க வேண்டி உள்ளது.

மாடலமறையோனின் அவ்வாறான உரையைக் கேட்ட சேரன் செங்குட்டுவன், பகைப்புலத்து அரசர்கள் பலரும் அறிந்திராத வியப்பிற்குரிய செய்தியினை, நான்கு மறைகள் கற்று அறிந்த மறையோனே, நீ என்ன கூறுகிறாய்? என்று கேட்க, அதற்குப் பதிலளிக்கும் விதமாக கோவலன்-மாதவிக்கு இடையில் நடைபெற்ற ஊடலும் அந்த ஊடல் காரணமாகக் கோவலன் மாதவியை விட்டுப் பிரிந்து கண்ணகியோடு மதுரைக்குப் புறப்பட்டுச் சென்றதும் அங்குக் கோவலன் இறந்ததும் குறித்துப் பின்வருமாறு சுருக்கமாகச் சொல்லி முடிக்கிறான்.

"புகாரில் கடற்கரைச் சோலையில் குளிர்ந்த கடல்துறையில் (கானலம் தண்துறை) கடல் விளையாட்டில் மாதவி மடந்தை பாடிய வரிப்பாடலைக் காரணமாகக் கொண்ட ஊடலின்போது ஊழ்வினைப்பயன் செயல்படத் துவங்கியது. அதனால் மாதவியுடன் ஊடல் கொண்ட கோவலன்

அவளைப் பிரிந்து தன் குலக்கொடி மனைவி கண்ணகியுடன் மதுரை மாநகர் புறப்பட்டுச் சென்றான்.

தழைகள் விரவித் தொடுக்கப்பட்ட வேப்பமாலையை அணிந்த பாண்டிய மன்னன் அழகிய வானுலகத்தை அடைந்தான். கொலை செய்யப்பட்ட கோவலனின் மனைவி கண்ணகி குடதிசையின் சேரநாட்டு மன்னனாகிய நின்னுடைய நாட்டில் வந்து புகுந்து, வடதிசை மன்னர்கள் தலைமுடியில் ஏறினாள் (சிலம்பு.27:55-65) என்றவன், பின்னர், இன்னும் கேட்டருள், இகழ்வேல் தடக்கை மன்னர் கோவே! யான் வரும் காரணம் (சிலம்பு.27:66,67) என்று தான் கங்கை நீராட வந்ததற்கான காரணம் இஃது என்று ஒரு நீண்ட செய்தியை விவரிக்கிறான்.

"தென்னவனின் மதுரைக்கு நான் சென்றேன். அங்குப் "பாண்டிய மன்னனைக் கண்ணகி சிலம்பினால் வென்றாள். ஆயர்சேரி மன்றத்தில் 'கோவலன் தீதிலன் கோமகன் தவறு செய்துவிட்டான்' என்று கூறிய மாதரி 'பாதுகாக்கப்பட வேண்டிய அடைக்கலத்தை இழந்தேன். இடையர்குல மக்களே!' என்று வருந்தித் தீமூட்டி, எரியும் நெருப்பில் விழுந்தாள். கோவலனின் துயரச்செய்தி கேட்டுச் சீற்றமுற்ற கவுந்தியின் சீற்றத்தைப் பாண்டிய மன்னனின் மரணம் சற்றுத் தணித்தது. என்றாலும், தன்னுடன் வந்த இவர்கள் தீவினையால் இறந்தார்களே என்று எண்ணி வேதனையில் உண்ணாநோன்பு இருந்து உயிர் துறந்தாள். மதுரை மாநகருக்கு ஏற்பட்ட எல்லாச் செய்திகளையும் ஒன்றுவிடாமல் அறிந்து, அதன் காரணத்தையும் உணர்ந்து கொண்டேன்.

அங்கிருந்து என் ஊருக்குச் செல்லத் தொடங்கினேன். அதனால் எனக்கு உண்டான துயரம் சற்றுத் தணிந்தது. கோவலன் கண்ணகிக்கு வேண்டியவர்களிடம் மதுரையில் நடந்தவை கூறினேன். மறுபிறப்பு இல்லாது செய்யும் முயற்சியில் ஈடுபட்ட சாரணர்கள் 300 பேர் முன்னிலையில் தனது செல்வங்கள் அனைத்தையும் பிறருக்குக் கொடுத்துவிட்டு துறவு மேற்கொண்டான் மாசாத்துவன். மகனின் துயரத்தைப் பொறுக்க முடியாமல் ஏங்கி உயிர் நீத்தாள் கோவலனின் தாய். கண்ணகியின் தந்தையோ ஆசீவகர் முன் புண்ணிய தானங்கள் செய்து துறவு மேற்கொண்டார். கண்ணகியின் தாயார் தன் இன்னுயிரை நீத்தாள். மாதவி தன் தாய் சித்ராபதியிடம் நன்னெறியாகிய துறவறத்தை அடைவேன் என்று மணிமேகலையை மாபெரும் துன்பம் தருகின்ற கணிகை கோலம் கொள்ளாது ஒழிக! எனப் பௌத்த துறவியாக மாறினாள். இவ்வாறு 'என் சொற்கேட்டு அறிந்தோரில் இறந்தோரும் உள்ளமையால் நன்னீர் கங்கையில் நீராட வந்தேன் (சிலம்பு.27:70-110) எனத் தான் கங்கை நீராட இமயம் வந்ததற்கான காரணத்தைச் சொல்லுகிறான்.

அவற்றைக் கேட்ட சேரன் செங்குட்டுவன் "மன்னவன் இறந்தபின் வளங்கள் நிறைந்த சிறப்புடைய பாண்டியனின் நாட்டில் நிகழ்ந்த தீங்குகளை இங்குக் கூறுக!" (சிலம்பு.27:114,15) என்று கேட்கிறான்.

அதற்குப் பதிலுரைக்குமுகமாகச் சேரன் செங்குட்டுவனின் மோகூர் மன்னன் மீதான போர் வெற்றிச்சிறப்பைக் கூறி வாழ்த்துகிறான். அதன் பிறகு வெற்றிவேல் செழியன் கொற்கையில் இருந்த பொற்கொல்லர்கள் ஆயிரம் பேரைக் கொன்று ஒருமுலை இழந்த திருமாபத்தினிக்கு உயிர்ப்பலி கொடுத்த செய்தியைச் சொல்லுகிறான். அடுத்துப் பாண்டிய நாட்டின் அரசனாக வெற்றிவேல் செழியன் முடிசூட்டிய செய்தியைச் சேரன் செங்குட்டுவனுக்குப் பதிலாக உரைக்கிறான் (சிலம்பு 27:116-140).

வஞ்சியிலிருந்து புறப்பட்டு 32 மாதங்கள் ஆகி இருந்த பின்னணியில் மதுரை பூம்புகார் உள்ளிட்ட பாண்டிய சோழ நாட்டிலும் என்ன நடந்தது? என்பதை முடிமன்னர்களை எல்லாம் தன் காலடியில் விழ வைத்ததுடன், இமயம் வரை படைநடத்திச் சென்று வெற்றி வாகை சூடிய சேரன் செங்குட்டுவன் ஒற்றர்கள் மூலமோ அல்லது தூதுவர்கள் மூலமோ அறிந்து கொள்ளாத விஷயங்களை மாடலமறையோன் என்ற ஒரு பார்ப்பனனிடம் அதுவும் கங்கையில் பாவம்

தொலைக்க வந்தவனிடம் கேட்டு அறிவது என்பது ஏன்? அதன் பின்னணி என்ன? என்பது குறித்து நாம் சற்றுச் சிந்திக்க வேண்டி உள்ளது.

அத்துடன், கண்ணகியின் வரலாற்றை முழுமையாக அறிந்தபின்னரே சேரன் செங்குட்டுவன் கண்ணகி கோயில் கட்ட இமயம் சென்றான் என்று ஒருபுறம் இருக்க, மறுபுறம் கண்ணகியின் வரலாற்றை மீண்டும் மாடலமறையோன் மூலம் மீண்டும் கேட்டு அறிவது என்ற முரண் இன்னொரு புறமிருக்க, ஒருவேளை உண்மையில் தான் அறியாத செய்திகள் இருப்பினும் அவற்றை ஒற்றர்கள் மூலமாக அறிவதை விடுத்து மாடலமறையோனிடம் கேட்டு அறிவதாக உள்ள இந்தக் குறிப்புகள் கவனம் கொள்ளக்கூடியனவாக உள்ளன.

மேலும், சேரன் செங்குட்டுவன் இமயத்தில் வெற்றிவாகை சூடிய மகிழ்ச்சியில் வெற்றியைப் பெற்றுத்தந்த வீரர்களுக்குப் பரிசுகளை வழங்கிக் கொண்டிருந்த பின்புலத்தில் அங்குச் சென்று சேருகிறான் மாடலன் என்பதும் அங்கு அவன் கூறிய செய்திகளை எல்லாம் கேட்ட சேரன் செங்குட்டுவன் இறுதியாக 'மறையோனைப் பேணினான். அவனுக்கு ஆடகப் பொன்னைப் பரிசாக அளித்தான். 'ஆரிய மன்னர் நூற்றுவரை அவர்களது சிறப்புமிக்க தன் நாட்டிற்குச் செல்க'! எனக் கூறி அவர்களை அனுப்பி வைத்தான். மறுபுறம் 'தவ வேடம் பூண்டு தப்பிப் பிழைத்த மாபெரும் படைகளை உடைய மன்னரின் குமாரர்களாகிய கனகவிசயரை மட்டும் சிறைப்படுத்தினான் என்பதும் அவ்வாறு சிறைப்பிடித்த அவர்களைச் சோழ பாண்டிய மன்னர்களிடம் காட்டி வர ஆவன செய்தான் என்பதுமான இந்த முரண்களை எல்லாம் முழுமையாக ஒன்றிணைத்துப் பார்க்க வேண்டியுள்ளது.

முதலாவதாக வெற்றிக்களிப்பில் இருக்கிறபொழுது மாடலமறையோன் சேரனிடம் சென்று சேருவது. இரண்டாவது அவ்வாறு அங்குச் சென்று சேர்வதற்கான காரணம் தான் சொன்ன செய்தியால் சிலர் இறந்தார்கள், அதனால் உண்டான பாவத்தைத் தொலைக்க என்று சொல்லுவது. மூன்றாவதாக நாட்டு நடப்பை மன்னனுக்குச் செய்தியாகச் சொல்வது என்ற மூன்று விஷயங்கள் மாடலமறையோனையும் சேரன் செங்குட்டுவனையும் இணைக்கின்றன.

இந்த மூன்று விசயங்களோடு நாம் மீண்டும் மாடலமறையோனின் வஞ்சிமா நகர சேரன் செங்குட்டுவன் சந்திப்புக் குறித்தும் இணைத்துப் பார்க்க வேண்டி இருக்கிறது.

அதற்கு முன்பாக நாம் கண்ணகி பற்றிய செய்தியைச் சேரன் செங்குட்டுவன் அறிந்த முறை குறித்தும் அறிவது அவசியமாகிறது.

மலைவளம் காணச் சென்ற சேரன் செங்குட்டுவனைக் காணும் குன்றக்குறவர்கள் ஏழு பிறப்பிலும் உமக்கு அடியவர்கள் நாங்கள், வாழ்க நின் வெற்றி! காட்டில் உள்ள வேங்கைமரத்தின்கீழ் ஒரு காரிகை தனது ஒரு முலையை இழந்து பெருந்துயர் கொண்டு இருக்க, தேவர்கள் போற்ற அவள் தன் கணவனுடன் வானுலகு சென்றாள். அவள் எந்த நாட்டைச் சேர்ந்தவளோ? யார் பெற்ற மகளோ? நின் நாட்டில் நடந்த இந்நிகழ்ச்சியைப் போல் நாங்கள் நினைத்துக் கூட பார்த்தது இல்லை! எனக் கூறி பல நூறாயிரம் ஆண்டுகள் வாழ்க! என வாழ்த்துகின்றனர். அதைக்கேட்ட சேரன் செங்குட்டுவனின் பெருஞ்சிறப்பினைக் கண்களால் கண்டு மகிழ்வுற்று வியப்பும், உவப்பும் அடைகிறான் (சிலம்பு.25:55-65). அப்போது, தண்தமிழ் ஆசானாகிய சீத்தலைச் சாத்தனார் அது பற்றி நான் கூறுகிறேன்' எனச் செங்குட்டுவனை நோக்கி கோவலன்-கண்ணகி கதையைக் கூறத் தொடங்குகிறார்.

"முன்பிறவியில் செய்த தீவினை சிலம்பைக் காரணமாகக் கொண்டு கண்ணகியின் கணவனுக்கு இறப்பினை விளைவித்தது. கண்ணகி சிலம்போடு சென்று வழக்காடி உண்மையை உணர்த்தினாள். பிறகு மதுரை மாநகரைச் சுட்டெரித்தாள். பாண்டியன் உயிர் நீத்தான். பாண்டியனின் மனைவியும் உயிரை இழந்தாள். கொடுங்கோல் தன்மை இதுவெனக் காட்டி உனக்கு உரைப்பவள் போல் கணவனை இழந்து தன் நாட்டிற்குச் செல்லாமல் தான் தனிமையில் இந்நாட்டின் உள்ளே வந்து சேர்ந்தாள்போலும்" (சிலம்பு.25: 66-91) என்று சீத்தலைச் சாத்தனார் நடந்த எல்லாவற்றையும் ஒழிவின்றி உரைத்தார்.

இவ்வாறு சீத்தலைச் சாத்தனாரிடம் அனைத்தையும் முழுமையாக அறிந்த பிறகு தான் சேரன் செங்குட்டுவன் கண்ணகி கோயில் கட்ட கல்கொணர இமயத்திற்குச் சென்றான். இஃது இவ்வாறு இருக்க மாதவி, மணிமேகலை பற்றிய முழுமைக் கதையைக் காப்பியமாக வடித்தவர் சீத்தலைச் சாத்தனார் என்பதையும் இணைத்துப் பார்க்க வேண்டியுள்ளது. இஃது இப்படி இருக்க, தேவந்தி மற்றும் மாடலமறையோன் மூலமாக மீண்டும் அக்கதையை இமயத்தில் வஞ்சியிலும் கேட்பதாக இளங்கோ கூறுவதன் காரணம் என்ன? மாடலமறையோன் மற்றும் தேவந்தியிடம் சேரன் கேட்டறியும் செய்திகளின் பின்புலம் என்ன? என்ற கேள்விகள் இங்கு எழுகின்றன. அந்தக் கேள்விகளுக்கான விடை காண அவ்விருவரின் கண்ணகி மற்றும் கோவலன் தொடர்பும் அதன் பின்புலமும் குறித்து அறிவது அவசியமாகிறது.

**கண்ணகி, கோவலன் கனவும் தேவந்தி, மாடலமறையோன் வரவும்**

தன்னைப் போல் கணவனைப் பிரிந்துள்ள கண்ணகியைப் பார்க்க வரும் தேவந்தி 'நீ உன் கணவனைப் பெறுவாய்'(சிலம்பு.9:44) என்று வாழ்த்த, 'பெறேன்!' என்று பதில் கூறும் கண்ணகி அதற்குக் காரணமான தான்கண்ட கனவைப் பற்றி அவளிடம் கூறுகிறாள். அக்கனவைக் கேட்ட அவள் சோமகுண்டம், சூரியகுண்டம் துறைமூழ்கி காமவேள் கோட்டம் தொழுதால்தான் இன்புறுவர். உலகத்து அயலார் போகம்செய் பூமியிலும் போய்ப் பிறப்பர். வா! சென்று நாமும் நீராடுவோம் என்று அழைக்க, பெருமை அன்று என்று மறுக்கும் கண்ணகி அந்த நேரத்தில் கோவலன் வர மதுரையை நோக்கிப் புறப்பட்டுச் சென்றுவிடுகிறாள். இவ்வாறு கண்ணகியின் கனவு பின்புலத்தில் தேவந்தி கண்ணகி சந்திப்பு நிகழ்கிறது. கண்ணகியின் அந்தக் கனவு குறித்து ஏறக்குறைய மூன்று மாத பயணத்தின்போது அவள் கோவலனிடமோ அல்லது உடன் பயணித்த கவுந்தியடிகளிடமோ சொல்லியதாகக் காப்பியத்தில் எங்கேயும் குறிப்பு இல்லை.

இஃது ஒருபுறம் இருக்க, மறுபுறம் பயணத்தின்போது கோவலன் ஒரு கனவு காண்கிறான். அந்தக் கனவை அவன் தன்னுடன் பயணித்த தன் மனைவி கண்ணகிக்கோ அல்லது வழித் துணையாக உடன் வந்த கவுந்தியடிகளிடமோ கூறாமல் புறஞ்சேரியில் சந்திக்கும் மாடலமறையோனிடம் கூறுவதாகக் காப்பியத்தில் சொல்லப்பட்டுள்ளது கவனிக்கத்தக்கது.

மாடலமறையோன் கோவலன் சந்திப்புக் குறித்து அறிவதற்கு முன் நாம் இரு செய்திகளை அறிவது இங்கு அவசியமாகிறது.

ஒன்று - வழிப் பயணத்தில் எதிர்ப்படும் மாங்காட்டு மறையோன் சந்திப்புப் பின்னணி.

இரண்டு - கோசிகமாணி சந்திப்புப் பின்னணி.

இந்த இருவர் சந்திப்புகளின் பின்னணியில் சில முக்கியமான செய்திகளை நாம் அறிந்துகொள்ள முடிகிறது.

மாங்காட்டு மறையோன் மதுரைக்கு வழி கூறுகிறான். கோவலன் மதுரைக்கு வழிகேட்ட பின்னணியில் இந்த வழி கூறுதல் சொல்லப்படுகிறது. மாங்காட்டு மறையோன் கூறிய மதுரைக்கான மூன்று வழிகள் பற்றிய செய்திக்கு மறுப்பு உரையாக கவுந்தியடிகள் பின்வரும் கருத்துக்களைச் சொல்லுகிறார்.

"நல்ல ஒழுக்கத்தைப் புரிந்த கோட்பாடுகளை உடைய நான்கு வேதங்களையும் தெரிந்த மறை வல்லவனே! குகை வழியில் புகுந்து செல்ல வேண்டிய அவசியம் எங்களுக்கு இல்லை. கற்பக மரத்தைக் கொண்ட இந்திரன் இயற்றிய (ஐந்திரம்) நூலின் வியாகரணத்தை அருகப்பெருமான் அருளிய (பரமாகமம்) உறுதிப்பொருளை (மெய்ப்பாடு முன்பே இயற்கை விளக்கிக் கூறியுள்ளதைக் காண்பாயாக!" (பரமாகமத்தில் இந்திரனின் ஐந்திரத்தைக் காணலாம்) சென்ற பிறப்பில் செய்த வினையை எல்லாம் இந்தப் பிறப்பில் அதன் பயனைக் காணவில்லையோ நீ! வாய்மையினின்று சிறிதும் பிறழாது, மன் உயிர்களைப் பேணுவோர்க்கு அடைய முடியாத அரும்பொருளும் உண்டோ! நீ விரும்பும் திருமாலாகிய தெய்வத்தைக் கண்டு அடிதொழச்

செல்வாயாக!. நாங்களும் நெடிய பயணத்தைத் தொடங்குகிறோம்" (சிலம்பு.11:156-66). இந்தக் கருத்துக்கள் சமண சமயக்கருத்துக்களாக உள்ளதோடு அஃது எல்லோருக்கும் பொதுவானதாகவும் இருப்பதை நாம் உணர்ந்து கொள்ள முடிகிறது.

இது குறித்து ஆராய்ந்து க.பஞ்சாங்கம், "மதுரைக்கு வழி கேட்ட கோவலனுக்கு விரிவாகப் பதில் கூறிய மறையோனிடம் கோவலன் கண்ணகி, என்ன நினைத்துக் கொள்வார்கள் என்பதைக் கூடப் பொருட்படுத்தாமல், தம் மதக்கருத்தை வலியுறுத்திக் கடுமையாகப் பதில் கூறுகிறார். மாங்காட்டு மறையோனிடம் பாதை கேட்டதோ கோவலன்; அவன் காட்டிய பாதைக்குப் பதில் கூறுவதோ கவுந்தி; இதிலும் அவருடைய இளமைக்கேயுரிய அவசரம்தான் புலப்படுகிறது" (க.பஞ்சாங்கம்.ப.174) மேலும், 'பயணத்தில் துணையாக கவுந்தியடிகள் வந்தாலும் பயணத்தை முன்னெடுத்தவன் கோவலனே!' (க.பஞ்சாங்கம். ப.173) என்ற ஒரு கருத்தையும் அவர் முன்வைப்பது இங்கு இணைத்துப் பார்க்க வேண்டி உள்ளது.

இந்தப் பின்னணியில் நாம் கோசிகமாணியின் வருகை குறித்தும் அறிய வேண்டியுள்ளது. மாதவியின் இரண்டாவது கடிதத்தைக் கொண்டு வரும் கோசிகாமணி கோவலனைச் சந்தித்தபோது கவுந்தியடிகள் உடன் இல்லை என்பது காப்பியத்தில் தெளிவாகச் சொல்லப்பட்டுள்ளது. அது பின்வருமாறு உள்ளது.

"வரிப்பாடல்களைப் பாடும் கொள்கையுடன் வேதங்களை ஓதாத ஒழுக்கத்திலிருந்து தப்பிய இழுக்குடைய முப்புரிநூலை மார்பில் அணிந்த பாணர்கள் வாழும் ஊரை அடைந்தனர். அவ்வூரில் துன்பங்கள் எதுவும் ஏற்படாத சிறப்பை உடைய பாதுகாப்பான இடத்தில் இருந்தனர். சுற்றிலும் முள்வேலியை உடைய பாதுகாப்பான அந்த ஊரின் ஓர் இடத்தில் கவுந்தியையும் கண்ணகியையும் இருக்கச் செய்து, முள்வேலியைக் கடந்து ஆங்கோர் நீண்ட வழியில் உள்ள பொய்கைக்கரையினைக் கோவலன் அடைந்தான். இக்காட்டுவழியில் கண்ணகியைத் தன்னுடன் அழைத்து வந்ததற்குப் பெரிதும் வருந்தி ஊது உலைத் துருத்தியைப் போன்று பெருமூச்சுவிட்டுக் கலங்கினான். வழி நடந்த களைப்பு மற்றும் கண்ணகியை உடன் அழைத்து வருகிறோமே என்ற வேதனை அவனது வடிவத்தை அடையாளம் தெரியாத அளவிற்கு மாற்றியிருந்தது.

அதனால் அவனைத் தேடிவந்த கோசிகமாணி என்ற கோசிக பிரமச்சாரி, கோவலன் இவன்தானா! என ஐயமுற்றான். 'கோவலனைப் பிரிந்து கொடுந்துயர் எய்திய நெய்தல் மலர் போன்ற நீண்ட கண்களை உடைய மாதவி போன்று இக்கொடிய வேனிற் காலத்து வெம்மையைப் பொறுக்க முடியாமல் மவர்களை எல்லாம் உதிர்த்து விட்டனையோ' என ஒரு குருக்கத்தி மாதவிக் கொடி நிழலைப் பார்த்துப் புலம்பினான்.

'மாதவி போன்று நீயும் வருந்தினை போலும்' எனப் பசுமையான இலைகளைக் கொண்ட குருக்க மரத்து நிழலில் நின்று கோசிகமாணி கூறியதைக் கேட்ட கோவலன், 'யாது நீ கூறியது? ஈங்கு' எனக் கேட்டான். ஐயம் தீர்ந்த கோசிகமாணி மிகவும் சிரமம் இல்லாது தீதில்லாத கோவலனைக் கண்டேன் என அவன் அருகில் சென்றான். (சிலம்பு.13:46-55). கோவலனைப் பிரிந்த மாதவியின் நிலை குறித்துச் சொன்ன கோசிகமாணி மாதவியின் கடிதத்தை அவனிடம் தர, கடித்தைப் படித்து, மாதவி மீது எந்தத் தவறும் இல்லை என்பதை அறிந்து அந்தக் கடித்தை அவனிடமே கொடுத்து, தன்பெற்றோரிடம் சேர்க்கச் சொல்லிவிட்டு அங்கிருந்து கண்ணகி, கவுந்தி இருந்த இடத்தை நோக்கிச் செல்கிறான்.

இவ்வாறு மாங்காட்டு மறையோன் மற்றும் கோசிகமாணி என்ற இருவரது சந்திப்புகளுக்குப் பிறகு மாடலமறையோன் கோவலன் சந்திப்பு நிகழ்கிறது.

பொதிகையில் நீராடி விட்டுத் தன் நகருக்கு திரும்பும் வழியில் இந்தச் சந்திப்பு நிகழ்கிறது. புறஞ்சேரியில் கவுந்தியடிகள் தங்கியிருந்த இடத்தை நோக்கி வரும் மாடலனைக் கோவலன் சென்று சந்தித்தான் என்று குறிக்கிறார் காப்பிய ஆசிரியர். இது 15ஆவது காதையான அடைக்கலக் காதையில் இடம்பெற்றுள்ளது.

இனம் | INAM (IIETS)
E-ISSN: 2455 - 0531 | UAN: TN0300061112
மலர் : 10 | இதழ் : 38 | மே | 2024 | Vol.: 10 | Issue: 38 | May | 2024

'தமர்முதற் பெயர்வோன் றாழ்பொழி லாங்கண்
வகுந்துசெல் வருத்தத்து வான்றுயர் நீங்கக்
***கவுந்தி யிடவயிற் புகுந்தோன் றன்னைக்***
***கோவலன் சென்று சேவடி வணங்க***
**நாவலந் தணன் றானவின் றுரைப்போன்** (சிலம்பு.15:16-20)

இந்த இருவர் சந்திப்பிற்கு முன் நடைபெற்ற செய்திகள் சிலவற்றை நாம் இங்கு இணைத்துப் பார்க்க வேண்டியுள்ளது.

இதற்கு முந்தைய காதையில் (ஊர்காண் காதை) புறஞ்சேரியில் தங்கி இருந்த கவுந்தியடிகளை அதிகாலையில் எழுந்து சந்திக்கச் செல்கிறான் கோவலன். அவ்வாறு சென்றவன், "தியானத்தில் இருந்த கவுந்தியடிகளைக் கையால் தொழுது நாவால் போற்றினான். நல்லொழுக்க நெறியிலிருந்து நீங்கியோர் போல் ஒழுக்கம் கெட்டவன் ஆனேன், நறுமலர் மேனியை உடைய கண்ணகி நடுங்கும் துயர் எய்தவும், முன் பின் தெரியாத நாட்டிற்கு, இத்துன்பம் நிறைந்த காட்டு வழியிலே அழைத்து வந்து துன்புற வைத்துச் சிறுமை உற்றேன். செய்தவத்தீர் யான்! தொன்மையான மதுரை மாநகரில் உள்ள வணிகர்களுக்கு (மன்னர் பின்னோர்) எனது நிலையை அறிவித்து, திரும்ப யான் வரும் வரை, நும் பாதுகாப்பில் இப்பைந்தொடி இருப்பாள். ஆகலின் இதில் நுமக்கு இடர் எதுவும் உண்டோ? அடிகளே!" (சிலம்பு.14:15-24) எனக் கோவலன் கவுந்தியடிகளிடம் கேட்க 'நின் காதலியுடன் துன்பப்படுவதற்கு நின் பழைய வினையே காரணம்" (சிலம்பு. 14:30) என அதற்குப் பதில் கூறும் கவுந்தியடிகள் அதன் பிறகு, உருவமில்லாத காமனால், காமத்தில் ஆழ்த்தி வருத்தும் வருத்தம் பிரிதலும், கூடலும் ஆகிய துன்பங்கள், சுருண்ட கூந்தலை உடைய மகளிரைப் புணர்ந்து மயங்குவோருக்கு எப்பொழுதும் உண்டு... காமத்தையே கைக்கொண்டவர்கள் பெருமையைக் கொடுக்காத அளவில்லாத துன்பத்தை அடைந்தனர். இஃது இன்று மட்டும் அல்லாது இறந்தவர்கள் பலராலும் தொன்று தொட்டு நடந்துவரும் தொன்மை உடையது.

'தன் தந்தையின் ஏவலால் தன் மனைவியுடன் (சீதை) காட்டிற்குப் போய் காதலி பிரிந்ததால் வேத முதல்வனாகிய நான்முகப் பிரமனைப் பெற்ற திருமாலாகிய இராமன் கடுந்துயர் அடைந்தான் என்பதை நீ அறியாயோ! இது நெடுங்காலமாக எல்லாருக்கும் தெரிந்த மொழியன்றோ!

நளன் முன்பு புட்கரனொடு சூதாடி மண்ணையும், ஆட்சியையும் இழந்தான். தன் மனைவி தமயந்தியுடன் கொடிய காட்டை அடைந்தான் நளன். காதல் இல்லாது பிரிந்தவன் அல்லன் அவன். அவனது காதலியும் இல்லற நெறியில் சிறுமை உற்றவளும் அல்லள். ஆயினும், அடவியாகிய காட்டில் ஆயிழை தமயந்தியை நள்ளிரவில் அவள் உறங்கும்போது தனியே விட்டுவிட்டு நீங்கினான். 'இது வலிய வினையால் நடந்தது அன்றோ? இது தமயந்தியின் பிழை என்று சொல்ல முடியுமா?'

ஆனால், நீ அப்படி இல்லை. ஆயிழை கண்ணகியோடு பிரியாத வாழ்க்கையைப் பெற்றிருக்கிறாய் அல்லவா! எனவே வருத்தம் கொள்ளாது மன்னனின் கூடல் நகர் செல்வாயாக!" (சிலம்பு.14:31-60) எனக் கவுந்தியடிகள் கோவலனின் வருத்தத்தைப் போக்கினார்.

இவ்வாறு கவுந்தியடிகளிடம் அறிவுரை கேட்டு மதுரை மாநகருக்குள் சென்ற கோவலன் அங்கு வணிகர்களைச் சந்திக்காமல் நகரில் பல்வேறு பகுதிகளில் சுற்றித் திரிந்து மீண்டும் புறஞ்சேரியை அடைகிறான். புறஞ்சேரியில் தான் மதுரை மாநகரில் பார்த்த செய்திகள் இவை என்று கவுந்தியடிகளிடம் கூறிக் கொண்டிருந்த பொழுதுதான் மேலே பார்த்த மாடல மறையோன் கவுந்தியடிகளின் இருப்பிடம் வருகிறான்.

இந்த இடத்தில் நாம் இரண்டு செய்திகளை முக்கியமாக கவனிக்க வேண்டி உள்ளது.

ஒன்று - கோவலன் தியானத்தில் இருந்த கவுந்தியைச் சென்று சந்தித்தபோது அவளை 'இரு கையால் வணங்குவதாகவும் அதேவேளை கவுந்தியின் இருப்பிடத்தை நோக்கி வந்த மாடல மறையோனின் திருவடியைத் தொழுது வணங்கியதாகவும் சுட்டப்படுவது. இந்த இரண்டின் பின்புலம் கவனத்தில் கொள்ளத்தக்கது.

இரண்டாவது, நகருக்குள் சென்று வணிகர்களைப் பார்த்து விட்டு வருகிறேன் என்று சென்றவன் அதற்கு மாறாக பல்வேறு காட்சிகளைக் கண்டு திரும்புகிறான். அவற்றில் இரண்டு விதமான செய்திகள்தான் இடம்பெற்றுள்ளன. ஒன்று, காமக்களியாட்டங்கள் பற்றியன. இரண்டு, பல்வேறு பண்டங்கள் விற்பனை தொடர்பானவை. 'மன்னனின் மாநகர் சென்று தங்குவதற்கு ஏற்ற இடத்தை அறிந்து வருக! (சிலம்பு.14:60,61) என்ற கவுந்தியடிகளின் பேச்சைக் கேட்டதாகவும் தெரியவில்லை. தான் சந்தித்து வருவதாகச் சொன்ன வணிகர்களையும் சந்திக்கவில்லை.

கோவலன் மதுரையைச் சுற்றிப் பார்க்கச் சென்ற இடங்களில் பார்த்தவை ஒன்றாக இருக்க கவுந்தியடிகளிடம் கூறியவை வேறொன்றாக உள்ளதும் குறிப்பிடத்தக்கது.

இந்தப் பின்னணியில் தான் மாடலமறையோனின் சந்திப்பு நிகழ்கிறது. அந்தச் சந்திப்பில் அவன் மாதவி மகளுக்குப் பெயரிடுதல், பார்ப்பனர்களுக்கு உதவுதல் முதலிய செய்திகளைத் தெரிவிக்கிறான் (சிலம்பு.15:20-90) இறுதியாக,

இம்மை செய்தன யானறி நல்வினை
உம்மைப் பயன்கொ லொருதனி யுழந்தித்
திருத்தகு மாமணிக் கொழுந்துடன் போந்தது
விருத்தகோ பால நீயென வினவ (சிலம்பு.15: 91- 94)

கேட்ட கோவலன் தன் கனவைக் குறித்து மாடலமறையோனிடம் சொல்லுகிறான். அதுவும் "வைகறைப் பொழுதில் கனவுகண்டேன். அது நன்றன்று உடளே வந்திடும்" என அஞ்சி கோவலன் கூறினான். அதைக் கேட்டு 'துறவறத்தில் ஈடுபட்டிருக்கும் துறவிகள் அல்லாது மற்றவர்கள் இம்மதில்புறத்து உள்ள இருக்கையில் (புறச்சிறை இருக்கை தங்குதல் பொருந்தாது. ஆதலின் அரசருக்குப் பின்னோர் வாழும் அகநகர் மருங்கில் உள்ள இருப்பிடங்களில் ஏற்றுக் கொள்வார்கள். இங்குத் தங்குவதை விட்டுவிட்டு நகரத்திற்கு உள்ளே சென்று தங்குக!" என மாடலமறையோன் கோவலனுக்குக் கூறினான்.

இந்தக் கோவலன் மாடலன் உரையாடலில் கவந்தியடிகள் உடன் இருந்தார் என்றோ அவர் மணிமேகலை குறித்த செய்தியை அறிந்தார் என்றோ நாம் காப்பியத்தில் தெளிவாக அறிந்து கொள்வதற்கு இடம் இல்லை.

ஆனால் சில ஆறிஞர்கள் (தெ.பொ.மீனாட்சி சுந்தரனார் ப.92, க. பஞ்சாங்கம் ப.175) கூறுவதுபோல் மாடலமறையோனும் கவந்தியடிகளும் கோவலனை உடனடியாக மதுரைக்குச் செல்லுங்கள் என்று அவனது கனவை அறிந்த பின்னணியில் கூறினார்கள் என்று சொல்லுவது ஏற்புடையதாக இல்லை. காரணம்,

காதலி தன்னொடு கதிர்செல் வதன்முன்
மாட மதுரை மாநகர் புகுகென
மாதவத் தாட்டியு மாமறை முதல்வனும் (சிலம்பு. 15: 111 -113)

என்ற அடிகளில் ஒன்றை நாம் நுட்பமாகக் கவனிக்க வேண்டியுள்ளது.

அது, கோவலன்-மாடலன் உரையாடலின் இறுதியில் மாடலன் கோவலனிடம் கூறுவதாகச் செய்தி இருக்க, மாடலமறையோன் பெயருக்கு அடுத்து கவுந்தியடிகளின் பெயர் இடம்பெற்று இருந்தால் கவுத்தியடிகளும் அவ்விருவர் உரையாடலில் உடன் இருந்தார் என்று நாம் ஏற்றுக்கொள்ளலாம்.

அப்படி இல்லாமல் கவுந்தியடிகள் பெயர் முதலிலும் அதை அடுத்து மாடலனின் பெயரையும் இளங்கோவடிகள் சொல்லி இருப்பதன் நுட்பம் நாம் இங்குக் கவனிக்க வேண்டி உள்ளது. அதாவது,

"………………… மன்னவன் கூடற்
பொருந்துழி அறிந்து போதுங் என்ற…"(சிலம்பு.14: 60- 61)

என்று ஏற்கனவே கவுந்தியடிகள் இதற்கு முன் 14ஆவது காதையான ஊர்காண் காதையில் சொல்லி இருப்பதைத் தான் இங்கு இணைத்துச் சொல்லியிருக்கிறார் என்பதாக நாம் புரிந்து கொள்ள வேண்டி உள்ளது.

அதாவது, தன்னுடைய மனைவி கண்ணகியைக் கவுந்தியடிகளிடம் விட்டுவிட்டு மதுரையை சுற்றிப் பார்க்கச் சென்ற கோவலன் மதுரையில் தான் கண்டவற்றைத் திரும்பி வந்து கவுந்தியடிகளிடம் சொல்லிக் கொண்டிருக்கிறான். அப்பொழுது அந்த இடத்தை நோக்கி மாடலமறையோன் வருகிறான். அப்படி வரும் மாடலனை எதிர்சென்று வணங்கி அவனோடு உரையாடலைக் கோவலன் தொடங்குகிறான் என்றுதான் காப்பியத்தில் இடம்பெற்றுள்ளது (சிலம்பு. 15: 6- 20).

இந்த உரையாடலின் இடையேயோ அல்லது இந்த உரையாடலின் தொடக்கத்திலேயோ கவுந்தியடிகள் கோவலனோடு சென்றார் என்றோ அந்த உரையாடலில் அவரும் இருந்தார் என்றோ குறிப்பு ஏதும் இல்லை. இது தெளிவாக உள்ளது இங்குக் கவனிக்கத்தக்கது.

இரண்டாவது, மாடலமறையோன் இரவிற்குள் மதுரை மாநகருக்குள் சென்று விடு! என்று கூறியதன் பின்னர் கவந்தியடிகளைப் பார்க்க இடையர்குல மாதரி வருகிறாள். அவ்வாறு வந்த அவள் கவுந்தியடிகளை வணங்கி நிற்கிறாள். அம்மாதரியைப் பார்த்துக் கண்ணகியைச் காட்டி 'இம்மடந்தையின் கணவன் பெயர் கோவலன். இப்பெண்ணின் கணவனின் தந்தையின் பெயரைக் கேட்டால் அவனது குலத்தைச் சார்ந்தவர்கள் பிறர்க்கரிய பொருளைப் பெற்றவர் போல் தமது விருந்தினராக எதிர்கொண்டு அழைத்து, செல்வர். கரிய பெரிய பெரிய இமைகளைக் கொண்ட இவளோடு இவளது கணவனையும் தமது காவல் மிகுந்த இல்லத்தில் இருக்க வைப்பர். அப்படிப்பட்ட செல்வம் உடையவர் இல்லம் செல்லும் வரை இடைக்குலப் பெண்ணாகிய உன்னிடம் இவளை அடைக்கலமாக அளிக்கிறேன்' எனக் கவுந்தியடிகள் மாதரியிடம் கூறுவது.

***மாதரி கேளிம் மடந்தைதன் கணவன்***
***தாதையைக் கேட்கிற் றன்குல வாணர் அரும்பொருள்***
***பெறுநரின் விருந்தெதிர் கொண்டு***
***கருந்தடங் கண்ணியொடு கடிமனைப் படுத்துவர்***
***உடைப்பெருஞ் செல்வர் மனைப்புகு மளவும்***
***இடைக்குல மடந்தைக் கடைக்கலந் தந்தேன்***"( சிலம்பு.15:125 - 130)

கவுந்தியடிகள் மாதரியின் மேற்கண்ட உரையாடலில் கோவலன் உடன் இருக்கவில்லை என்பது அவர்களின் இந்த உரையாடலே தெளிவாகக் காட்டுகிறது. இவற்றையெல்லாம் நாம் ஒப்பிட்டுப் பார்க்க, கோவலன் மாடலமறையோன் உரையாடலைக் கவந்தியடிகள் கேட்டிருக்க துளியும் வாய்ப்பு இல்லை என்பது தெளிவாகத் தெரிகிறது. ஒருவேளை அப்படிக் கேட்டிருந்தால் கவுந்தியடிகள் கண்ணகி-மாதரி உரையாடலின் போது கோவலன் இருந்திருக்க வேண்டும் அல்லது கோவலன் கண்ணகியை மாதரியிடம் கவுந்தியடிகள் அடைக்கலமாகக் கொடுத்து இருக்க வேண்டும். ஆனால் அவற்றிற்கெல்லாம் மாறாக கண்ணகியைச் சுட்டி, 'கண்ணகியது கணவன் கோவலன் மற்றும் அவனது செல்வச் செழிப்பு' என்ற நிலையில்தான் மாதரியிடம் கவுந்தியடிகள் அடையாளப்படுத்துகிறார்.

ஆக, மாடலமறையோன் கோவலன் குறித்து அவனிடத்தில் சொன்ன செய்திகள் குறித்தும் அதுபோல் கோவலன் மாடலமறையோனிடம் கூறிய கனவு குறித்தும் கவுந்தியடிகளுக்குத் தெரிந்திருக்கவில்லை என்பதுதான் காப்பிய ஆசிரியரால் பதிவு செய்யப்பட்ட கருத்தாக இருப்பதை நாம் தெளிவாகப் புரிந்துகொள்ள முடிகிறது.

மேலும், ஏறக்குறைய மூன்று மாத பயணத்தில் நன்கு அறிமுகம் ஆகியிருந்தாலும் கவுந்தியடிகளை அடிகளே என்று கோவலன் அழைத்து இருந்தாலும் அந்தப் பயணத்தை முன்னெடுத்தவன் கோவலன்தான் என்பதும் இங்கு இணைத்துப் பார்க்க வேண்டி உள்ளது.

இவற்றையெல்லாம் நாம் இணைத்துப் பார்க்கிறபொழுது கோவலன் கண்ட கனவு குறித்துக் கவந்தியடிகளுக்கு மட்டுமன்றி, கண்ணகிக்கும் தெரியாது என்பதும் மாடலனுக்கு அந்த கனவு குறித்துத் தெரிந்த பின்னணியில் அவன் அதற்கு எவ்வித பதிலும் கூறாமல் அவனை மதுரை மாநகருக்குள் செல்லுமாறு மட்டும் கூறினான் என்றும் தெளிவாக அறிய முடிகிறது.

மேலும், 'கோவலன் இறப்பை அறிந்து இறந்தவர்கள் தன் வழியாகச் செய்தியைக் கேட்டதனால் இறந்தார்கள், அதனால் தனக்குப் பாவம் உண்டானது. அவ்வாறு உண்டான பாவத்தைத் தொலைக்க கங்கையில் நீராட வந்தேன்' என்று பின்னாளில் சேரன் செங்குட்டுவனிடம் கூறுவதையும் இணைத்துப் பார்க்க மாடலமறையோனின் குணநலன் என்ன என்று அறிந்துகொள்ள முடிகிறது.

**பாசண்ட சாத்தன், தேவந்தி, மாடல மறையோன் இணைவின் பின்புலம்**

தன் மாற்றாளின் மகவு பால்விக்கி இறந்து போனதால் அக்குழந்தையை எப்படியாவது உயிர்ப்பிக்க வைத்துவிட வேண்டும் என்று ஒவ்வொரு கோயிலாகச் சென்ற மாலதி இறுதியில் பாசண்ட சாத்தன் கோயிலில் மயக்கமுற்றுக் கிடக்கிறாள். அவள் கையில் இருந்த குழந்தையைப் பிணம்தின்னும் பேய் ஒன்று 'செய்த தவம் இல்லோருக்குத் தேவர் வரம் கொடார் என்று கூறிப் பிடுங்கித் தின்று விடுகிறது. அதனால் செய்வது அறியாது தவித்துக் கொண்டிருந்த அவள் முன்தோன்றிய பாசண்ட சாத்தன் தானே குழந்தையாகவும் மாறி அவளுடன் வீட்டுக்குச் செல்லுகிறான். பிறகு, வளர்ந்து வாலிபனாக மாறும் அவன் தேவந்தி என்ற பார்ப்பனப் பெண்ணைத் திருமணம் செய்து கொண்டு சில ஆண்டுகள் (8) அவளுடன் வாழ்ந்து வருகிறான். தன்னுடைய பெற்றோர்கள் இறந்த பிறகு தன்னுடைய உண்மை உருவைத் தன் மனைவி தேவந்திக்குக் காட்டித் தன் கோவிலுக்கு வா! என்று சொல்லிவிட்டுச் செல்கிறான். இது பாசண்ட சாத்தன் பற்றிய முதல் பதிவு.

இவ்வாறு கூறிச் சென்ற பாசண்ட சாத்தனைத் தேடி அவனது மனைவி தேவந்தியானவள் கோவில் கோவிலாக பொய்கைகளாக என்று அலைந்து திரிந்து கொண்டிருப்பவளாகக் காப்பியத்தில் சுட்டப்படுகிறது. அவ்வாறு இருக்கும் அவள் கண்ணகியின் கணவன் பிரிந்து சென்றதை அறிந்து கண்ணகியிடம் சென்று சோமகுண்டம் சூரிய குண்டம் துறை மூழ்கி காமவேள் கோட்டம் தொழுவோம் வா என்றும், அவ்வாறு செய்தால் நம்முடைய பிரிந்த கணவரை மீண்டும் பெறலாம் என்றும் அவள் அழைக்கிறாள். அப்போது அதைக் கண்ணகி அது பெருமை அன்று மறுத்துவிடுவது கவனத்தில் கொள்ளத்தக்கது.

இத்துடன், காப்பியத்தில் இருந்து காணாமல் போகிற பாசண்ட சாத்தன் காப்பியத்தின் இறுதியில் தேவந்தியின் மீது தெய்வமாகத்தான் வருகிறான். அதுவும், காப்பியத்தின் இறுதிக் காதையான வரந்தரு காதையின் தொடக்கத்தில் தேவந்தியை நோக்கி, 'நீ வாய்விட்டு அரற்றிய மணிமேகலை யார்? அவள் துறவு மேற்கொள்ளக் காரணம் யாது? இங்கு அவற்றைக் கூறுக? எனச் சேரன் செங்குட்டுவன் வினவ, மாதவி மற்றும் மணிமேகலையின் துறவு குறித்து கூறிக் கொண்டிருந்தவள் மீது திடீரென்று தெய்வமாக அப்பாசண்ட சாத்தன் தோன்றுகிறான்.

அவ்வாறு தோன்றிய அவன், "சிறந்த அணிகள் அணிந்தவருள் அரட்டன் செட்டியின் மனைவி ஆயிழை பெற்றெடுத்த இரட்டையராகிய அழகிய பெண்கள் இருவரும் இங்கு

உள்ளனர். திருவனந்தபுரத்தில் அனந்த பத்மநாபன் கோயில் பாம்பணையில் பள்ளிகொண்ட திருமாலுக்குத் தொண்டு ஊழியம் செய்யும் சேடக்குடும்பியின் சிறிய மகளும் மங்கல மடந்தை கண்ணகியின் கோயிலில் இருக்கிறாள். செங்குத்தான உயரத்தை உடைய மலையின் உச்சியில் முருகனின் யானை முகம் போல் தோன்றும் உயர்ந்த பாறையில் நீர்நிறைந்த அழகிய நீர்ச்சுனைகள் பல உள்ளன. அவற்றில் ஒன்றில் மூழ்கி நீராடுபவர்கள் பண்டைப் பிறப்பினை உணர்வார்கள். தெய்வத்தன்மை வாய்ந்த அந்தச் சுனைநீரை இந்தப் பெண்கள் மீது தெளித்தால் அவர்கள் தம் முன்பிறப்பை அறிவார்கள் காண்பாய்" (சிலம்பு.30:6-70) என்று எதிரே இருந்த மாடலமறையோனைப் பார்த்துக் கூறுகிறான்.

அதைக் கண்டு சேரன் மாடலமறையோன் முகத்தை வியந்து பார்க்க, தேவந்தி, மாலதி, பாசண்ட சாத்தன் வரலாற்றைச் சேரன் செங்குட்டுவனுக்குச் கூறும் மாடலமறையோன், "என்றும் அழியாத தன்னுடை தெய்வத் தன்மையைத் தேவந்திக்குச் காட்டிச் சென்ற அவன் கண்ணகி கோயில் அருகில் ஓர் அந்தணனாக வந்தான். தன்னுடைய கையில் இருந்த உறியில் தங்கிய கமண்டலத்தை என்னிடம் தந்தான். கமண்டலத்தின் தன்மைகள் அனைத்தையும் கூறி என்னைக் காத்து வரும்படி என்னிடம் கொடுத்துச் சென்றவன் பின்பு வரவில்லை" (சிலம்பு. 30: 85- 91).

நான் என்னுடன் கொண்டுபோன அந்தக் கமண்டலத்தை இங்குக் கொண்டு வந்துள்ளேன். கமண்டத்தின் தன்மைகள் அனைத்தையும் அறிந்த சாத்தன் இத்தேவந்தியின் மேல் தோன்றி அந்நீரினை இச்சிறுமிகள்மீது தெளியும் என்று கூறினான். மன்னர்களின் மன்னவா! இம் மடந்தைகளின் மேல் தெளித்து உண்மைகளை அறிவோம்!" என்று மாடல மறையோன் கூறி முடித்தான்.

மாடலனின் இந்தக் கூற்றிற்குப் பிறகு கண்ணகியின் தாய், கோவலனின் தாய், மாதரி என்று ஒவ்வொருவராகத் தோன்றிப் பேசுவதாகக் காப்பியத்தின் நகர்வு அமைகிறது.

இப்படியாக மாலதி தேவந்தி மாடலமறையோன் என்ற இந்த மூவர் பின்னணியில் சுழலும் பாண்ட சாத்தன் பற்றிய குறிப்புகள் நம்மைப் புதிய கோணத்தில் அணுகுவதற்குத் தூண்டுகின்றன.

சோமகுண்டம் சூரிய குண்டம் முதலான நீர்நிலைகளில் மூழ்கிக் காமவேள் கோட்டத்தைத் தொழுவோம் வா என்று தேவந்தி கண்ணகியை அழைத்தபொழுது மறுத்த கண்ணகி ஒருபுறம். மறுபுறம் மாங்காட்டு மறையோன் பொய்கையில் நீராடினால் பழம்பிறவியை அறியலாம் என்று கூறியபொழுது தடுத்த கவுந்தியின் செயலைக் குறித்து எந்தவிதக் கருத்தும் கூறாத கோவலன், மூன்று மாத தொடர்ச்சியான பயணங்களை மேற்கொண்டாலும் தன்னைப் பற்றிப் பெரிய அளவில் எந்த ஒரு செய்தியையும் கவுந்தியடிகளிடம் சொல்லாதவன், மாடலமறையோனைப் பார்த்தவுடன் ஓடோடிச் சென்று தான் கண்ட கனவு குறித்துச் சொல்வது என்ற இந்தப் பின்னணியில் 'என்னுடைய கோயிலுக்கு வா! என்று கூறிச் சென்ற பாசண்ட சாத்தன் மாடலமறையோனைச் சந்தித்துச் சுனைநீரைக் கொடுத்து 'இந்த நீர் பழம்பிறவியை அறிய வைக்கக்கூடியது' என்று கூறி அனுப்பியது என்பதும், அதைக் கொண்டு வந்து எந்த ஒரு செயலை வேண்டாம் என்று மறுத்தாலோ அதே செயலை அவள் மீது செலுத்துவது என்பதும் அதுவும் அதை முடிமன்னனாக விளங்கக்கூடிய சேரன் செங்குட்டுவன் முன்னிலையில் செய்து முடிப்பதுமான இந்த இணைப்புப் புள்ளிகளை எல்லாம் நாம் ஒருங்கிணைத்துப் பார்க்க வேண்டியுள்ளன. அத்துடன், சுனைநீர் கொடுத்த அவன் அதன்பின் வரவில்லை என்று மாடலமறையோனால் சுட்டப்படுவதும் கவனிக்கவேண்டிய ஒன்று.

### இறந்தவர்களும் வாழ்வு பெற்றவர்களும் அவர்களின் பின்புலமும்

இந்தப் பின்னணியில் மேலும் இரண்டு விஷயங்களை இணைத்துக் கவனிக்க வேண்டியுள்ளது. அது, காப்பியத்தில் இறந்தவர்களும் வாழ்வு பெற்றவர்களும் அவர்களின் பின்புலமும்.

சமண சமயச் சிந்தனை கொண்டவனாக அறியக்கூடிய கோவலன் கொலை செய்யப்படுகிறான். அவனது இறப்பின் துயரம் தாங்காமல் அவனது தந்தையும் மனைவி கண்ணகியின் தந்தையும் தம் செலவங்கள் அனைத்தையும் தானம் செய்துவிட்டுத் துறவியாக மாறுகிறார்கள் என்பதாக இளங்கோவடிகள் குறிக்கிறார். அதேவேளை கோவலன் கண்ணகியின் இறப்பிற்குப் பிறகு கண்ணகிக்கு எழுப்பப்படும் கோயில் வைதீக மரபின்படி வழிபாட்டுத் தளமாக மாற்றம் அடைகிறது. இது முரணாக அமைகிறது என்பதைச் செல்லத் தேவை இல்லை.

இஃது ஒருபுறமிருக்க, மறுபுறம் கோவலன் கண்ணகிக்கு மிகவும் நெருக்கமாக உள்ளவர்களாக அறியக்கூடிய கோவலனின் தந்தை கண்ணகியின் தந்தை ஆகியோர் சமண சமயத் துறவியாக மாறுவதையும் கோவலனுக்கு அதே நெருக்கமாக மாதவி மணிமேகலை பௌத்த துறவிகளாக மாறுகிறார்கள் என்ற முரணையும் நாம் கவனத்தில் கொள்ள வேண்டியுள்ளது. (மணிமேகலையில் கோவலனின் தந்தை பௌத்த சமயத்தைத் தழுவியதாகச் சுட்டப்படுவதும் இங்குக் கவனத்தில் கொள்ளப்பட வேண்டிய ஒன்று. அது குறித்து ஆராயப்பட வேண்டும்.) அதாவது,

கோவலன் கண்ணகி மரணம்

| சமண சமயத்துறவு (கோவலன் தந்தை கண்ணகி தந்தை) | பௌத்த சமயத்துறவு மாதவி, மணிமேகலை | கண்ணகி தெய்வம் தேவந்தி, மாடலன் |
|---|---|---|

என இஃது அமைந்துள்ளது. மேலும்,

கோவலன் கண்ணகி மரணம்

| **வாழ்க்கை தொலைத்தவர்கள்** | **துறவியானவர்கள்** | **வாழ்வு பெற்றவர்கள்** |
|---|---|---|
| கவுந்தி மரணம்<br>மாதரி மரணம்<br>ஐயைத் திருமணத் தடை | கோவலன் தந்தை, கண்ணகித் தந்தை துறவு<br>மாதவி, மணிமேகலை துறவு | கண்ணகி தெய்வம்<br>தேவந்தி, மாடலன் |

கோவலன் கண்ணகியின் மரணத்தின் பின்னணியில் மும்முனை மாற்றங்கள் நிகழ்வதை அறிய முடிகின்றது. அதாவது, கோவலனுக்கு நெருக்கமான அனைவரும் கோவலன் தந்தை, கண்ணகியின் தந்தை, மாதவி, மணிமேகலை என அனைவரும் தங்களுடைய செல்வங்களை எல்லாம் துறந்து துறவிகளாக மாறி, சமூகத்திற்குத் தங்களை ஒப்படைக்கின்ற நிலையில் இதற்கு நேர் எதிராக தேவந்தி, மாடலமறையோன் ஆகிய இருவரும் இறந்த கண்ணகியின் பின்னணியில் தங்களது வாழ்க்கைநிலையை வைதிக வழிபாட்டு நெறிப் பின்னணியில் வளம் உடையதாக மாற்றிக் கொள்கிறார்கள் என்பதையும் நாம் தெளிவாக உணர்ந்துகொள்ள முடிகிறது. மேலும், கோவலன் கண்ணகிக்கு எவ்வகையிலும் கடன்படாத இன்னும் சொல்லப்போனால் கோவலன் கண்ணகிக்கு உதவி செய்தவர்களான கவுந்தியடிகள், மாதரி ஆகியோர் அவர்களது துயர நிலையை எண்ணி இறந்து போனதையும் மாதரி மகள் ஐயையது திருமணம் தடைபட்டுப் போனதையும் இங்குக் கவனத்தில் கொள்ள வேண்டியுள்ளது.

**முடிவுரை**

கோவலனைப் பிரிந்து வேதனையில் தவித்துக் கொண்டுள்ள கண்ணகியைப் பார்க்க தேவந்தி வருகிறாள். அவ்வாறு அவள் வந்து சேரும்போது கண்ணகி கனவைக் கண்ட வேதனையில் இருக்கிறாள்.

கோவலன் தன்னுடைய மனைவி கண்ணகியை அழைத்துக்கொண்டு மதுரைக்குப் பொருள் ஈட்டச் செல்லுகிறான். உடன் கவுந்தியடிகள் என்ற சமணத் துறவி வருகிறார். ஏறக்குறைய

மூன்று மாதங்கள் உடன் பயணித்த கவுந்தியடிகள் மற்றும் மனைவியிடம் சொல்லாத கோவலன், தனக்கு வந்த கனவு குறித்து மாடலமறையோனைப் பார்த்தபொழுது ஓடோடிச் சென்று சொல்லுகிறான். அதுவும் கண்ணகியைக் கவுந்தியடிகளிடம் அடைக்கலமாக இருக்குமாறு கூறிவிட்டு மதுரையைச் சுற்றிப் பார்க்கச் சென்று வந்த பின்புலத்தில் இந்தக் கனவு பற்றிய செய்தியை அவன் கூறுவது என்பது கவனத்தில் கொள்ளத்தக்கது.

கோவலன் கண்ணகி இறப்பிற்குப் பிறகு கண்ணகியின் தோழியான தேவந்தியோ அல்லது தன்னுடைய கனவு பற்றிய செய்தியைச் சொல்ல தகுதியானவன் என்று நினைத்த மாடல மறையோனோ அவர்களுக்காகப் பெருந்துயரம் கொண்டதாகவோ அல்லது இறந்ததாகவோ இல்லை. ஆனால் மூன்று மாதம் உடன் வந்த ஒரே காரணத்திற்காகவும் தன்னுடைய வீட்டில் தங்குவதற்கு இடம் கொடுத்த காரணத்திற்காகவும் முறையே கவந்தியடிகளும் மாதரியும் இறந்து போகிறார்கள். அவர்கள் கோவலன் கண்ணகியின் மேல் வைத்த சிலநாள் அன்பு அவர்களை அந்த அளவிற்குக் கொண்டு போய்ச் சேர்க்கிறது.

ஆனால், தேவந்தியும் மாடலனும் கோவலன் கண்ணகியின் இறப்பிற்குப் பிறகு கண்ணகியின் பெயரை முன்மொழிந்தவர்களாக விளங்கியதோடு இல்லாமல் வைதீக மரபின் பின்புலத்தில் தங்களது வாழ்க்கையைச் செழுமை செய்து கொள்கிறார்கள். இந்த இடத்தில் பாசண்ட சாத்தன் என்ற ஓர் அதீத சக்தி அஃது இடையில் திடீரென்று காணாமல் போவதும் மாடலமறையோனிடம் சுனைநீரைக் கொடுத்துவிட்டு மறைவதும் தேவந்தியின் மேல் தெய்வமாக வந்து தோன்றுவதும் என்ற இந்த மீவியல் புனைவுகள் வெளிப்படையாகச் சொல்ல முடியாத ஏதோ ஒரு மர்மத்தை கொண்டுள்ளதாகப் புரிந்து கொள்ளத் தூண்டுகிறது.

கண்ணகி தானும் கோவலனும் புத்த தேவன் பாதங்களைப் படிந்து பல பிறப்புகள் தொடர்ந்து பிறந்து சித்திகளை அளித்து மரணம் அற்ற பெருவாழ்க்கையைப் புத்தன் அருளால் பெறுவோம் என்று மணிமேகலையிடம் (மணிமேகலை காப்பியத்தில்) சொல்லுவதும் சிலப்பதிகாரத்தில் தேவந்தியின் மேல் தெய்வம் உற்றவளாக வெளிப்பட்டு தென்னவன் தீதிலன் என்று கூறுவதும் தனக்கு அடைக்கலமாகக் கொடுத்த பொருளை இழந்தோமே என்று வருந்தி உயிர்விட்ட மாதரி மற்றும் திருமணமாகாமல் தவித்துக் கொண்டுள்ள அவளது மகள் ஐயை குறித்த எவ்விதமான கருத்துக்களையும் கூறாததையும் நாம் ஒன்றிணைத்துப் பார்க்க வேண்டி உள்ளது. அப்படிப் பார்க்க, கண்ணகி என்ற பெண் தெய்வம் ஆக்கப்பட்டதன் பின்புல அரசியல் நன்கு புலனாகும்.

மேலும், இந்த இடத்தில் செய்தவம் இல்லோருக்குத் தேவர் வரம் கொடார் என்று மாடலமறையோன்வழிச் சொல்லப்படுவதும் அதனால்தான் கோவலன் மற்றும் கண்ணகியின் தாயார், மாதரி உள்ளிட்டோர் தெய்வமாகத் தேவலோகத்திற்குச் செல்லவில்லை என்று ஒருபுறம் சொல்லப்படுவதும் மறுபுறம் கோவலன் அந்தணர்களுக்குச் செய்த கொடையின் பலனால்தான் தேவலோகத்தை அடைந்தான் என்றும் மீண்டும் வந்து கண்ணகி தேவலோகத்திற்கு அழைத்துச் சென்றான் என்றும் (சிலப்பதிகாரத்தில்) கூறப்பட, மணிமேகலையில் கோவலன் செய்த முற்பிறவியின் பயனால் தேவ உலகம் சென்றான் என்று கூறப்பட்டுள்ளதையும் நாம் இணைத்து வாசிக்க வேண்டும். அப்படி வாசிக்க, இளங்கோவடிகள் கூறும் தெய்வம் தெளிமின் என்ற திறவுகோலைக் கொண்டு நாம் இவற்றையெல்லாம் இணைத்து பார்க்க, சமண சமயத்தின் வீழ்ச்சியையும் பௌத்த சமயத்தின் எழுச்சியையும் இவ்விரு காப்பியங்களும் அடுத்தடுத்து சொல்வதைப் பிரதானமான நோக்கமாகக் கொண்டிருப்பதையும் அதற்கான கதைக்களமாக கோவலன் கண்ணகி மாதவி மணிமேகலை வாழ்க்கை அமைந்து உள்ளது என்பதாகவும் நாம் புரிந்துகொள்ள முடியும்.

**துணைநின்றவை**

1. இளவழுதி வீ., சிலப்பதிகாரம் (மூலமும் உரையும்), 2015 (முதல் பதிப்பு), கவிதா பப்ளிகேஷன்ஸ், தி.நகர், சென்னை - 600 017.
2. இறைக்குருவனார், சிலம்பில் பிழையா (ம.பொ.சி.க்கு மறுப்பு), 1983 (மறுபதிப்பு - 1) தமிழ்க்கொடி பதிப்பகம் , 88 தம்புசெட்டித் தெரு, சென்னை - 600 001.

3. சிதம்பரனார், சாமி., சிலப்பதிகாரத் தமிழகம், 2008 (முதல் பதிப்பு), அறிவுப் பதிப்பகம், இராயப்பேட்டை, சென்னை – 600 014.
4. சீனிச்சாமி. து., தமிழ் காப்பிய கொள்கை, 1985 (முதல் பதிப்பு) தமிழ் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் - 613 010.
5. சுப்பிரமணிய ஆச்சாரியார் வெ.சு. , சிலப்பதிகார ஆராய்ச்சி, 1917, முனுசாமி முதலியார் நா., பத்திராதிபர் 'ஆனந்தபோதினி,' சென்னை.
6. சுப்பிரமணியன் ச.வே., கானல் வரி, 2002 (முதல் பதிப்பு), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை – 600 113.
7. திரிகூட சுந்தரம், பொ., சிலப்பதிகாரம் (சொர்ணம்மாள் நினைவுச் சொற்பொழிவுகள்), 1967 (முதல் பதிப்பு), அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ் நூல் வெளியீடு.
8. நடராசன், தி.சு., சிலப்பதிகாரம் மறுவாசிப்பு, 2015 (முதல் பதிப்பு), நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட், சென்னை - 600 098.
9. பஞ்சாங்கம், க., இலக்கியத் திறனாய்வு (பஞ்சாங்கம் கட்டுரைகள் II), 2010 (முதல் பதிப்பு), காவ்யா வெளியீடு, கோடம்பாக்கம், சென்னை – 600 024.
10. மாணிக்கம் ஞா. (உ.ஆ)., சிலப்பதிகாரம் தெளிவுரை, 2019 (பத்தாம் பதிப்பு), உமா பதிப்பகம், சென்னை – 600 001.
11. மீனாட்சி சுந்தரனார், தெ.பொ., சிலப்பதிகாரம் குடிமக்கள் காப்பியம் தெ.பொ.மீ களஞ்சியம் - 4, 2005 (முதல் பதிப்பு), காவ்யா வெளியீடு, கோடம்பாக்கம், சென்னை - 600 024.
12. வேங்கடசாமி மயிலை சீனி., பௌத்தமும் தமிழும், 1942, கழக வெளியீடு, சென்னை – 600 018.
13. இரட்டைக் காப்பியங்களில் மணிமேகலை பற்றிய செய்திகளின் பின்புல அரசியல், இனம் பல்துறை பன்னாட்டு இணையத் தமிழாய்விதழ், மலர்- 9, இதழ் -35, ISSN 2455 - 0531, https://inamtamil.com/journal/article/view/229
14. சிலப்பதிகார வாசிப்பில் உள்ள முரண்பாடுகளும் இடைவெளிகளும், ஜூலை - 2021, Shanlax International Journal of Tamil Research Volume: 6 Issue:1 P-ISSN: 2454- 3993 http://www.shanlaxjournals.in/journals/index.php/tamil/article/view/4035
15. தேவந்தி – மாடலமறையோன் பயணங்களில் உள்ள முரண்களும் அவற்றின் பின்னணியும், மார்ச் - 2023, புதிய அவையம், pp: 253 – 261, ISSN : 2456-821X http://www.shcpub.edu.in/shc/publish_paper/?name=Puthiya+Avaiyam

இனம் | INAM (IIETS)
E-ISSN: 2455 - 0531 | UAN: TN0300061112
மலர் : 10 | இதழ் : 38 | மே | 2024 | Vol.: 10 | Issue: 38 | May | 2024

# சொல் எனும் சோலையிலே திருக்குறளும் தம்மபதமும் Thirukkural and Dhammapadam in the oasis of words

**சி. சாவித்ரி | Ch. Savithri**[1] ORCID

[1]இந்திய மொழிகள் மற்றும் ஒப்பிலக்கியப் பள்ளி, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், தமிழ் நாடு, இந்தியா, savithritamiluniversity@gmail.com, DOI: 10.5281/zenodo.11336171

**ஆய்வுச்சுருக்கம் (Abstract)**

'சொல்' எனும் சோலையிலே வளர்ந்து நின்ற கற்பக விருட்சங்களில் ஒன்று உலக பொதுமறையாம் திருக்குறள், மற்றொன்று உலகெங்கும் போற்றப்பெறும் புத்தபகவானால் போதிக்கப்பெற்ற தம்மபதம், இவ்விரு நூல்களிலும் எடுத்துரைக்கப்பட்டுள்ள 'சொல்' தொடர்பான சிந்தனைக் கூறுகளை முதன்மைத் தரவுகளாகக் கொண்டு இவ்வாய்வுக்கட்டுரை அமைக்கப்படுகிறது. திருக்குறள் மற்றும் தம்மபதம் இரண்டுமே உலக மக்கள் அனைவருக்கும் பொது வாழ்வியல் அறத்தை எடுத்துரைக்கும் நீதி நூல்களாக வாழ்வியல் அறநெறியை உலகெங்கும் பரப்பும் உன்னத நோக்கில் அமைப்பப்பட்ட நூல்களாகும். இந் நூல்களில் 'சொல்' எனும் கருத்தியலில் கூறப்பெற்ற 'அறச்சிந்தனைகள்' பொது உடைமையாகவே அமைந்துள்ளன என்ற கருதுகோளின் அடிப்படையில் இக்கட்டுரை நகர்ந்து செல்கின்றது.

மேற்கூறிய இரு நூல்களிலும் சொல்லப்பெற்ற 'சொல்' தொடர்பானத் தரவுகளை ஆதாரமாக அமைத்துக் கொண்டு 1.அமைப்பியல் 2. உத்திகள் 3. கருத்தியல் எனும் தலைப்புக்களில் விளக்கபட்டுள்ளது. அமைப்பியல் எனும் தலைப்பின்கீழ் இரு நூல்களின் புற, அகக் கட்டமைப்புகளை விளக்கப்படுகிறது.

கருத்தியல் அடிப்படையில் 'சொல்' எனும் கருத்தை திருவள்ளுவர் –
"யாகாவாராயினும் நாகாக்க காவாக்கால்

சோகாப்பர் சொல் இழுக்குப்பட்டு"

எனக்கூறி, உலக மக்கள் அனைவரும் பயன்படுத்தும் சொற்களை நெறிமுறைப் படுத்தியுள்ளார். இதனை, நீத்தார் பெருமை, அறன் வலியுறுத்தல், இனியவைக்கூறல், நடுவு நிலைமை, பொறையுடைமை, பயனில சொல்லாமை, வாய்மை, கல்லாமை, கேள்வி, அறிவுடைமை, குற்றம் கடிதல், பெரியாரைத் துணைக்கோடல், சொல்வலிமை, வினைத் திட்பம், வினை செயல்வகை, தூது, மன்னரைச் சேர்ந்தொழுகுதல், குறிப்பறிதல், அவையறிதல், அவையஞ்சாமை, அரண், தீநட்பு, கூடாநட்பு, கயமை போன்ற 24 அதிகாரங்களில் 100 குறட்பாக்கள் வழி 'சொல்' கருத்தியல் விவரிக்கப்பட்டுள்ளது. திருவள்ளுவர் கூறிய 'சொல்' தொடர்பான இச்சிந்தனையையே புத்த போதனைகள் என்று கூறப்படும் 26 வர்கங்களும், 423 காதைகளும் கொண்ட 'தம்மபதம்' நூலின் 'சொல்' சிந்தனையோடு ஒப்பிட்டு சான்று காட்டி விளக்கப்படுகிறது.

உத்திகள் அடிப்படையில் திருவள்ளுவர் மற்றும் புத்தர் மக்களுக்கு வாழ்வியல் நீதியை எடுத்துரைக்கும் வண்ணம் அவர்களால் கையாளப்பட்ட உத்திகள் (உவமைகளாக, நேரடியாக, மறைமுகமாக, பலன்களாக, அஃறிணைப் பொருள்களாகக் கூறல் போன்றவை) பலவற்றையும் ஆராய்ந்து ஒப்பிடப்பட்டுகிறது.

One of the great trees that grew in the oasis of 'col' is Thirukkural, which is universally known, and the other is Dhammapadam, which is taught by Lord Buddha, who is admired all over the world. Both Thirukkural and Dhammapadam are books of justice that teach the common morality of life to all the people of the world and are written with the noble aim of spreading morality of life throughout the world. This article moves

on the basis of the hypothesis that the 'moral thoughts' expressed in the concept of 'word' in these books are public property.

Based on the data related to the 'word' mentioned in the above two books, it is explained under the headings of 1. Book Structure, 2. Techques 3. Ideology.

The external and internal structures of both texts are explained under the heading of structure.

Conceptually based on the concept of 'word' Thiruvalluvar -

yaavaagaraayinum naakaakka kaavaakkaal

cookaappar col izhukkuppattu

According to him, he has standardized the words used by all the people of the world. This is called pride, virtue emphasis, pleasuring, middle ground, endurance, useless speech, dumbness, stupidity, questioning, lack of knowledge, blame bite, Periyar subtext, speechlessness, verb tense, verb function, messenger, kingship, notation, knowing, lack of speech. , the concept of 'col' is described through 100 Kuratpas in 24 chapters like Aran, Deenadpu, Kudanadpu, Kayamai etc. Thiruvalluvar's thought about 'word' is compared with the thought of 'word' in the book 'Dhammapadam', which has 26 classes and 423 kathas, which are said to be Buddhist teachings.

In terms of strategies, many of the strategies used by Thiruvalluvar and Buddha to convey the justice of life to the people (as metaphors, direct, indirect, benefits, etc.) are analyzed and compared.

**திறவுச்சொற்கள் (Keywords):** கற்பக விருட்சம், அமைப்பியல், Structuralism, வாழ்வியல் நீதி, சொல் கருத்தியல், conceptual.

## முன்னுரை

சொல் எனும் சோலையிலே வளர்ந்து நின்ற ஒன்று - உலகப் பொதுமறையாம் திருக்குறள். மற்றொன்று - புத்த பகவானால் போதிக்கப்பெற்ற தம்மபதம். இவ்விரு நூல்களில் எடுத்துரைக்கப்பட்டு 'சொல்' சிந்தனைகளை முதன்மைத் தரவுகளாகக் கொண்டு இவ்வாய்வுக்கட்டுரை அமைக்கப்பட்டது. திருக்குறள் மற்றும் தம்மபதம் இரண்டுமே உலக மக்கள் அனைவருக்கும் பொது வாழ்வியல் அறத்தை எடுத்துரைக்கும் நீதி நூல்களாக வாழ்வியல் அறநெறியை உலகெங்கும் பறைச்சாற்றும் உன்னத நோக்கில் எழுதப்பெற்ற நூல்களாகும். இந்நூல்களில்'சொல்' எனும் கருத்தியலில் கூறப்பெற்ற அறச்சிந்தனைகள் பொது உடைமையாகவே அமைந்துள்ளன என்ற கருதுகோளின் அடிப்படையில் இக்கட்டுரை நகர்ந்து செல்கிறது.

இதன் அடிப்படையில் இரு நூல்களிலும் சொல்லப்பட்டசெய்திகளை அடிப்படையாகக் கொண்டு அத்தரவுகளை

1. இரு நூல்களின் அறிமுகம்
2. இரு நூல்களின் அமைப்பு முறை
3. இரு நூல்களிலும் கையாளப்பட்டுள்ளஉத்திகள்
4. இருநூல்களில் 'சொல்' தொடர்பான கருத்தியல்கள்

என்ற உட்தலைப்புகளில் பகுத்துஆராயப்பட்டுள்ளது.அவற்றின் விளக்கம்வருமாறு:

### ❖ இரு நூல்களின் அறிமுகம்

இனம் | INAM (IIETS)
E-ISSN: 2455 - 0531 | UAN: TN0300061112
மலர் : 10 | இதழ் : 38 | மே | 2024 | Vol.: 10 | Issue: 38 | May | 2024

தமிழில் உள்ள நூல்களிலேயே சிறப்பிடம் பெற்று உலக பொதுமறை என்று அழைக்கப்படும் நூல் திருக்குறள். அடிப்படையில் இது ஒரு பொது வாழ்வியல் நூல். மனித வாழ்வின் முக்கிய அங்கங்களாகியஅறம், பொருள், இன்பம் ஆகியவற்றைப் பற்றிவிளக்கும் இந்த நூலை இயற்றியவர் திருவள்ளுவர். இவரை நாயனார், தேவர், தெய்வப்புலவர், பெருநாவலர், பொய்யில் புலவர்என்றும் கூறுவர். இவர் கி.மு.2 முதல் 8 ஆம் நூற்றாண்டுகளுக்கு இடைப்பட்டக் காலங்களில் வாழ்ந்ததாக நம்பப்படிகிறது. குறள் வெண்பாக்களால் ஆனமையால் குறள் என்றும், திருக்குறள் என்றும் பெயர் பெற்றது.

பாளி மொழியில் அமைக்கப் பெற்ற நூல் தம்மபதம். 'தம்மம்' என்றால் அறம், 'பதம்' என்றால் பாதை அல்லது வழி என்று பொருள். தம்மபதம் என்றால் புத்தரின் போதனைகள் என்றும் பொருள் உணடு. இது பௌத்த அற நூல் தொகுப்பான திரிபிடகங்களில் உலகளாவிய நிலையில் மிகவும் பிரசித்திப் பெற்ற நூல் தம்மபதம். இந்நூல் 423 காதைகளில் 26 இயல்களில் புத்தரின் போதனைகள் விளக்கமாக கொடுக்கப்பட்டுள்ளன. இந்நூல் முழுவதும் செய்யுள் அமைப்பைக் கொண்டு புத்தரின் போதனைகளைப் பொது மக்களுக்கு புரியும் விதமாகவும் எளிமையான நடையில் அமைக்கப்பட்டுள்ளது. முக்கியமாக தேரவாதக் கிளைக்குச் சார்ந்த பௌத்தமதவாதிகள் இந்நூலில் உள்ள பாடல்களை, புத்தர் பல்வேறு சூழல்களில் தானே சுயமாகக் கூறியதாக எண்ணம் கொண்டு திகழ்கின்றனர். திரிபிடகம்பாளி மொழியில் பொது மக்களுக்கும் புரிகிற வண்ணம் போதிக்கப் பட்டுள்ளது. திரிபிடகங்களில் முதலாவதான ஸூத்த பிடகத்தில் புத்தரின் உபதேசங்களையும், உரையாடல்களையும் தொகுத்தனர். ஸூத்த பிடகம் தீக்க நிகாய, மஜ்ஜம நிகாய,ஸாயுக்த நிகாய, அங்த்தார நிகாய, குத்த நிகாய என ஐந்து நிக்காயைகள் கொண்டது. தம்மபதம் குத்த நிகாயத்திற்குச் சார்ந்த 15 நூல்களில் ஒன்றாகும்.

### ❖ இரு நூல்களின் அமைப்பு முறை

எந்த ஒரு நூலானாலும் அதற்கு அகம், புறம் என்ற இரு கட்டமைப்புகள் இருக்கும். அந்த வகையில் இரு நூல்களிலும் மேற் குறிப்பிட்ட அமைப்பு முறையைக் காணலாம்.

#### o திருக்குறள் புறக் கட்டமைப்பு

நூலின் புறக்கட்டமைப்பு என்பது கண்ட உடனேயே கண்களுக்குப் புலப்படும் அனைத்து வடிவங்களும் புறக் கட்டமைப்புக்குள் வரும். திருக்குறள் கட்டமைப்பைக் கீழ்க்கண்ட அட்டவணையில் காணலாம்.

| | | | | | | திருக்குறள் | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | அறம் | | | | | | பொருள் | | | | | இன்பம் |
| பகுதி | பாயிரம் | இல்லறம் | துறவறம் | ஊழியல் | அரசியல் | அமைச்சியல் | அறணியல் | கூழியல் | படையியல் | நட்பியல் | குடியியல் | களவியல் | கற்பியல் |
| அதிகாரங்கள் | 1-4 | 5-24 | 25-37 | 38 | 39-63 | 64-74 | 75 | 76 | 77-78 | 79-95 | 96-108 | 109 -115 | 116-133 |
| குறள் | 40 | 200 | 130 | 10 | 250 | 110 | 10 | 10 | 20 | 170 | 130 | 70 | 180 |

**வடிவம் :**

- ❖ ஈரடி – குறட்பா
- ❖ முதலடியில்நான்குசீர்கள், இரண்டாமடியில்மூன்றுசீர்கள்

- ஒவ்வொருஅதிகாரத்திலும்பத்துக்குறள்கள்என்ற நிலையில் அமைக்கப்பட்டுள்ளது.

**தம்மபதம் புறக்கட்டமைப்பு**

தம்மபதம் 432 செய்யுட்பாக்கள், 26 பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு, அவற்றை பாளி மொழியில் 'வக்$^3$கோ$^3$'என்றும் தமிழ் மொழிப்பெயர்ப்பில் 'இயல்' என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்நூலின் புறக்கட்டமைப்புக்கீழ்க்கண்ட அட்டவணையில் விளக்கப்பட்டுள்ளது.

| வ.எண் | பாலி மொழிப் பெயர்கள் | தமிழ் மொழிபெயர்ப்பு | பாக்கள் | பா அடிகள் | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | 2 | 3 | 4 | 5 | 6 |
| 1 | யமக வக்$^3$கோ$^3$ | இரட்டைச் செய்யுலியல் | 22 | 21 | 1 | -- | - | _ |
| 2 | அப்பமாத வக்$^3$கோ$^3$ | தெளிவியல் | 12 | 11 | 1 | -- | - | _ |
| 3 | சித்த வக்$^3$கோ$^3$ | உள்ள வியல் | 11 | 11 | - | - | - | _ |
| 4 | புப்$^3$ப$^3$ வக்$^3$கோ$^3$ | மலர் இயல் | 16 | 16 | - | - | - | _ |
| 5 | பால வக்$^3$கோ$^3$ | பேதை இயல் | 16 | 14 | 2 | - | - | _ |
| 6 | பண்டி$^3$த வக்$^3$கோ$^3$ | அறிஞர் இயல் | 14 | 11 | 2 | 1 | - | - |
| 7 | அரஹந்த வக்$^3$கோ$^3$ | அறிவர் இயல் | 10 | 8 | 2 | - | - | - |
| 8 | ஸகஸ்ஸ வக்$^3$கோ$^3$ | ஆயிரவியல் | 16 | 14 | 2 | - | - | - |
| 9 | பாப வக்$^3$கோ$^3$ | தீவினையியல் | 13 | 11 | 2 | - | - | - |
| 10 | தண்ட$^3$ வக்$^3$கோ$^3$ | ஒறுப்பியல் | 17 | 16 | 1 | - | - | 1 |
| 11 | ஜரா வக்$^3$கோ$^3$ | முதுமை இயல் | 11 | 10 | - | 1 | - | - |
| 12 | ஆத்வ வக்$^3$கோ$^3$ | ஆன்மவியல் | 10 | 8 | - | 2 | - | - |
| 13 | லோக வக்கோ | உலக வியல் | 12 | 11 | - | 1 | - | - |
| 14 | புத்த வக்$^3$கோ$^3$ | புத்தர் இயல் | 18 | 17 | - | 1 | - | - |
| 15 | ஸுத்த வர்கோ$^3$ | நலவியல் | 12 | 10 | - | 2 | 1 | - |
| 16 | பிய வக்$^3$கோ$^3$ | விரும்பியல் | 12 | 12 | - | - | - | - |
| 17 | கோத$^4$ வக்$^3$கோ$^3$ | சினவியல் | 14 | 13 | 1 | - | - | - |
| 18 | மல வக்$^3$கோ$^3$ | மாசியல் | 21 | 19 | - | 2 | - | - |
| 19 | த$^4$ம்மட்ட$^2$ வக்$^3$கோ$^3$ | அறத்தாரியல் | 17 | 16 | - | 1 | - | - |
| 20 | மக்க$^3$ வக்$^3$கோ$^3$ | வழியியல் | 17 | 16 | - | 1 | - | - |
| 21 | பகிண்ணக வக்$^3$கோ$^3$ | பலவகை இயல் | 16 | 14 | - | 2 | - | - |
| 22 | நிரய வக்$^3$கோ$^3$ | நரகவியல் | 14 | 13 | - | 1 | - | - |
| 23 | நாக வக்$^3$கோ$^3$ | யானை இயல் | 14 | 14 | - | - | - | - |
| 24 | தண்ஹா வக்$^3$கோ$^3$ | வேட்கை இயல் | 26 | 24 | - | 2 | - | 1 |

இனம் | INAM (IIETS)
E-ISSN: 2455 - 0531 | UAN: TN0300061112
மலர் : 10 | இதழ் : 38 | மே | 2024 | Vol.: 10 | Issue: 38 | May | 2024

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 25 | பி$^{4}$க்கு$^{2}$ வக்$^{3}$கோ$^{3}$ | துறவி இயல் | 23 | 21 | - | 2 | - | - |
| 26 | ப்$^{3}$ராஹ்மண க்$^{3}$கோ$^{3}$ | அந்தணரியல் | 41 | 37 | - | 4 | - | - |
| 27 | ----- | ---- | 7 | 6 | 1 | - | - | - |

**ஒன்றுபட்டும் வேறுபட்டும் உள்ளவை**

- திருக்குறள் முப்பால் என்ற பெயரில் மூன்று முதன்மையான பாகங்களாகப் பிரிக்கப் பட்டுள்ளது. தம்மபதத்தில் இதுபோன்ற பிரிவுகள் இல்லை.
- இரண்டு நூல்களும் அதிகாரப் பகுப்பைப் பின்பற்றியுள்ளன.
- திருக்குறளில் ஈரடி அமைப்பில் முதலடியில் நான்கு சீர்களும், இரண்டாவது அடியில் மூன்று சீர்களும் கொண்டு அமைந்துள்ளது. தம்மபதம் மிகுதியாக ஈரடியும், மிகக்குறைவான எண்ணிக்கையில் மூன்று, நான்கு, ஐந்து, ஆறு அடிகளிலும் அமைந்துள்ளது.
- திருக்குறளில் ஒவ்வோர் அதிகாரத்திலும் பத்துப்பத்துக் குறள்களாக வரிசைப்படுத்தப்பட்டுள்ளது. ஆனால் தம்மபதத்தில் பாக்கள் ஒரேமாதிரியான எண்ணிக்கையில் அமைக்கப்படவில்லை. இதில் பலவகையான பாக்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன.

65. திருக்குறள் உலக வாழ்வியல் நீதியை 133 அதிகாரங்களில் 1330 குறட்பாக்களில் அமைத்துள்ளது. தம்மபதம் 26 இயல்களில் 423 பாக்களாக அமைத்துள்ளது

- **அகக்கட்டமைப்பு**

அகக்கட்டமைப்பு பொருள் அடிப்படையில் அமைந்திருப்பது. இதை இரு நூல்களிலும் காணலாம். அவை :

இரு நூல்களுமே இயல் தலைப்புகளுக்கும், அதில்உள்ள பாக்களுக்கும் தொடர்புடையதாகவே அமைந்துள்ளன.

திருக்குறள் அனைத்து அதிகாரங்களின் தலைப்புக்கள்படித்த உடனேயே என்ன கருத்தை இந்த அதிகாரம் கூறுகிறது என்ற புரிதல் வந்துவிடும். தம்மபதத்தின் இயல் தலைப்புக்களும் அவ்வண்ணமே இருந்தபோதிலும் ஐந்து தலைப்புக்கள் மட்டும்மாறுபட்டே அமைந்துள்ளது. அவை–

இரட்டை செய்யுளியல், 2. மலரியல், 3. யானையியல், 4. ஆயிரவியல், 5. பலவகையியல்.

இந்த ஐந்து இயல்களின் தலைப்புகள் மட்டும் படிக்கும்போது கருத்துக்களுடன் தொடர்பில்லாதவை போல் இருக்கும். ஆனால், இயல்களுக்குள்ளே சென்று படிக்கும்போதுதான் தலைப்புகளுக்கும் உள்ளே உள்ள கருத்துக்களுக்கும் எவ்வாறு தொடர்புப்படுத்தப்பட்டுள்ளது என்பதை அறிந்துகொள்ள இயலும்.

திருக்குறளில் ஒவ்வோர் அதிகாரத்திலும் தலைப்புகளை விளக்கிக்கூறும் வண்ணம் பத்துப் பாக்களிலும் தொடர்பு நிலையில் அமைந்துள்ளது. தம்மபதத்தில் ஒவ்வோர்இயல்களிலும் கூறியுள்ள பாக்கள் அனைத்தும் தொடர்புடையதாகவே அமைந்துள்ளன.

திருக்குறள் அதிகாரங்களில் அமைந்துள்ள குறள்களின் அமைப்புமுறையில் தனித்தனிக் கருத்துக்களையே கொண்டுள்ளன. ஒன்றோடு ஒன்று இணைந்த கருத்துகளைக் காணமுடிவதில்லை. தம்மபதத்தில்சில இயல்களில் இரண்டு அல்லது மூன்று பாக்கள் மட்டும் ஒன்றோடொன்று தொடர்புடைய பாக்களாகவும்,சில இடங்களில் தனித்தனிப்பொருண்மையிலும் காணமுடிகிறது.

1. **உத்திகள்**

இரு நூல்களிலும் சொல்லப்பட்ட கருத்துக்களை எடுத்துரைக்கும் நிலையில் ஆசிரியர்கள் தனக்கென ஒரு முறைமையைப்பின்பற்றுவார்கள். அதுதான்அணுகுமுறை. அந்த அணுகுமுறையில் பல உத்திகளைக்கையாண்டிருப்பர். இந்த நிலையில் திருக்குறளும் தம்மபதமும் அறக் கருத்துக்களைக் கூறுவதற்காகப்பல்வேறு உத்திகளைக் கையாண்டுள்ளன.அவற்றின் விளக்கத்தைக் கீழ்க்காணும் அட்டவணையில் காணலாம்.

| வ.எண் | திருக்குறள் | தம்மபதம் |
|---|---|---|
| 1 | அறிவுறுத்தல் | அறிவுறுத்தல் |
| 2 | ஒப்பிடுதல் | ஒப்பிடுதல் |
| 3 | பலன் கூறுதல் | பலன் கூறல் |
| 4 | நேர்ப்படக் கூறல் | நேர்ப்படக்கூறல் |
| 5 | | மறைமுகமாகக் கூறல் |
| 6 | செய்திவாக்கியங்களாகக் கூறல் | செய்திவாக்கியங்களாகக் கூறல் |
| 7 | அறிவுறுத்தல் + ஒப்பிடு | தொடர்புப் படுத்திக்கூறல் |
| 8 | ஒப்பீடு + பலன் கூறல் | கதைப்பாங்கில் கூறல் |
| 9 | பலன் + அறிவுறுத்தல் | |
| 11 | செய்தி வாக்கியம் + பலன் | |
| 12 | கருத்திற்குத் தொடர்புப் படுத்திக் கூறல் | |
| 13 | கருத்திற்குத் தொடர்பில்லாமல் கூறல் | இரட்டைப்பாக்கலாகக் கூறல் |
| 14 | வினா வாக்கியமாகக் கூறல் | வினாவாக்கியமாகக் கூறல் |
| 15 | கட்டளை வாக்கியமாகக் கூறல் | கட்டளை வாக்கியமாகக் கூறல் |

## 1. அறிவுறுத்தல்

அறிவுறுத்தல் என்பது கட்டளை வாக்கியமாக அமைந்திருப்பது. இதில் போ, போகாதே,செய், செய்யாதே, இரு, இருக்காதேஎன்பனபோன்ற பல்வேறு சொற்களால் பொருளை வெளிப்படுத்தக் கூடியதாக அமைகின்றன. இந்த உத்தியை இரு நூலாசிரியர்களும் கையாண்டுள்ளனர்.

சான்று :

வியவற்க எஞ்ஞான்றும் தன்னை நயவற்க

நன்றி பயவா வினை (குற்றம் கடிதல் : 9)

(எப்போதும் தன்னைத் தானே மிகவும் உயர்வாக வியந்து எண்ணிக் கொள்ளக்கூடாது; நன்மை விழையாச் செயல்களைச் சிந்திக்கவும் கூடாது)

ந தம் கம்மம் ஸாது[4] யம் கத்வா அநு தப்பதி

யஸ்ஸ அஸ்ஸுமுகோ[2] ரோத[3]ம் விபாகம் படி[3]சேவதி (பேதை இயல் – பா 8; பக். 34)

(எதைச் செய்தால் பின் மனம் வருந்துமோ, எதன் விளைவை அழுதுகொண்டே அடைய நேருமோ, அத்தன்மையுள்ள வினையைச் செய்வது தகாது)

குறளில் கூடாது என்ற வார்த்தையையும், தம்மபதத்தில் தகாது என்ற வார்த்தையையும் பயன்படுத்தியதால் இவை அறிவுறுத்தல் என்ற உத்திக்கு சான்றாகக் கூறலாம்.

### 2. ஒப்பிடுதல்

ஒப்பிடுதல் உத்தியை இரண்டு வகையாகப் பிரிக்கலாம்.

1. உவமையை முன் பயன்படுத்தி பின்பு கருத்தைச் சொல்லுதல்
2. கருத்தைமுன் கூறி பின் உவமையைப் பயன்படுத்துதல்

**2.1.உவமைகளை முன் கூறி பின் கருத்தைச் சொல்வது**

அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை

இகழ்வார்ப் பொறுத்தல் தலை(பொறையுடைமை :1)

இந்தக் குறட்பாவில் முதலில் உவமையைப் பயன்படுத்தி, பின் கருத்துச்சொல்லப்பட்டுள்ளது.

ப$^{2}$ந்த$^{3}$நம் சபலம் சித்தம் து$^{3}$ரக்கம் துந்நிவாரயம்

உஜும் கரோதி மேதா$^{3}$வி உ கரோவா தேஜநம்

(உள்ள இயல் – 33). பா. 1; பக். 17)

(வில்லாளி அம்பை நிமிர்த்தி வைப்பது போல, அறிவு மிக்க பெரியோன் நடுக்கம் உள்ள, நிலையற்ற, காத்தற்கரிய, விளக்கம் இல்லாத தன் உள்ளத்தை நேராக்குகின்றான்). இதில் முன் உவமையை பயன்படுத்தி பின் கருத்து கூறப்பட்டுள்ளது.

**2.2.கருத்தை முன் கூறி பின் உவமையைப் பயன்படுத்துதல் :**

கருத்தை முன் கூறி அதை மற்றொரு பொருளோடு ஒப்பிட்டுக் கூறல். அதாவது கருத்து முன்னும் ஒப்பீடு பின்னும் வரும் நிலை.

இனிய உளவாக இன்னாத கூறல்

கனிருப்பக் காய்கவர்ந் தற்று (இனியயை கூறல் : 10)

(இனிய சொற்கள் ஏராளமாக இருக்கையில், அதற்கு மாறாகக் கடுஞ்சொல்லைக்கூறுதல், கனிகள் இருக்கையில் காயைத் தின்பதற்கு ஒப்பாகும்)

பாமாதம் அப்பமாதேகரு யதா நூததி பண்டிதோ

பஞ் பஞ்ஞ பாஸாதா மாருஹ்ஹ அஸோகோ சோகிநம் (தெளிவியல்-3; பா.8;பக்.15)

(அறிவு சிறந்த ஒருவன் மயக்கத்தைத் தெளிவால் ஒழித்ததும் மேனிலையில் அமர்ந்து துயரம் அற்றவனாய்த் துயர்ப்படுவாரைக் காண்பான். மலைமேல் இருப்பவன் தாழ்நிலத்தில் இருக்கும் மக்களைப் பார்ப்பது போலவே அறிவன் பிறரைப் பார்க்கிறான்).

இரண்டு பாக்களிலும் முதல்வரி கருத்தைக் கூறும் நிலையிலும் இரண்டாவது வரி அதற்கு உவமையை பயன்படுத்தும் வண்ணம் அமைந்துள்ளதால் இதனைக் கருத்து முன், உவமை பின் கூறும் உத்தி எனலாம்.

**3. பலனைக் கூறல்**

ஒரு குறளில் ஒரு கருத்தைச் சொல்லி அதற்கான பலனையும் சேர்த்து கூறல். இது இரண்டு நூல்களிலுமே பயன்படுத்தப்பட்டுள்ளன.

பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா

பிற்பகல் தாமே வரும் (இன்னா செய்யாமை : 9)

(ஒருவன் பிறர்க்கு முன்னர் துன்பம் செய்தால், அவனுக்குப் பின்னர் அத்துன்பம் பிறர் செய்யாமல், தானே அவனைத் தேடிக்கொண்டு வரும்)

து$^3$ந்நிக்க$^3$ த$^3$மதோ$^2$ ஸாது$^4$ சித்தம்

த$^3$ந்தம் ஸுகா$^2$ வஹம் (உள்ள இயல்)-- 3; பா.3; பாக்.18)

(அடக்குதற்கு அறியதும், ஓட்டம் உள்ளதும், தம் விருப்பம் போல விழுவதும் ஆன மனத்தை அடக்குவதே சிறப்பாம். அடக்கிய மனம் இன்பம் தருவதாம்)

**4. நேர்படக் கூறல்**

நேர்படக்கூறல் எனப்படுவது ஒரு கருத்தினை வெளிப்படையாகக் கூறுதல். இதை இரண்டு நூல்களும் பின்பற்றியுள்ளன.

நன்மையும் தீமையும் நாடி நலம்புரிந்ததன்மையான்

ஆளபடும் (தெரிந்து வினையாடல் :1)

(நன்மைகளையும் தீமைகளையும் நன்கு ஆராய்ந்து பார்த்து நன்மையைச் செய்து முடிக்கும் தன்மையுடையவனையே ஆட்கொள்ள வேண்டும்)

அப்பமாதி$^3$ ரதோ பி$^4$க்கு$^2$ பமாதே பயதஸ்ஸிவா

ஸம்யோஜநம் அணும் தூலம் டஹம் அக்கீ விகச்சதி (தெளிவியல் -2) பா. 11; பக். 16)

(தெளிவில் விருப்பம் உள்ள துறவி மயக்கத்தில் அச்சம் காண்பவனாய்ச் சிறிய பெரிய பற்றுக்களை எல்லாம் அனல் போல எரிந்துக்கொண்டு செல்வான்).

இரு நூல்களிலும் தெளிவான மனநிலையில் செயல்படும் அவசியத்தை நேரடியாகவே கூறியுள்ளதால் இப்பாக்களில் நேர்படக்கூறல் என்ற உத்தி கையாளப்பட்டுள்ளது.

**5. மறைமுகமாகக் கூறல்**

அஃறிணைப் பொருள்களின் தன்மையை நேரடியாகக் கூறிச் செல்வது. இதில் அறிவுறுத்தலோ, ஒப்புமையோ இருக்காது. பெரும்பாலும் இது செய்தி வாக்கியமாகவே இருக்கும். இந்த உத்திதிருக்குறளில்கையாண்டதாகத்தெரியவில்லை.தம்மபதத்தில்பல இடங்களில் இந்த உத்திகையாளப்பட்டுள்ளது. சான்றாக புப்ப வக்$^3$கோ$^3$ என்ற மலரியல்

புப்பாகி ஹேவ பசிநந்தம் வ்யாஸத்த மாநஸம் கரம்

ஸுத்தம் காமம் மஹோகோவ மச்ச ஆதாய கச்சதி (பா:4)

(மலர்களையே திரட்டிக்கொண்டிருக்கும் கலங்கிய மனம் உள்ள மனிதனை, உறங்கும் ஊரைப் பெரு வெள்ளம் விழுங்குவது போல எமன் எடுத்துச் செல்கிறான்).

இந்த பாட்டில் மலர் என்று சொன்னது பூ அல்ல பெண்கள். பல பெண்களோடு காம லீலைகளில்ஈடுபடுபவன் என்ன கதியாவன் என்று கூறுகிறது.

ஆக, இந்த பா வில் பெண் என்பதற்கான சொல்லை நேரடியாகக் கூறாமல் மறைமுகமாகக் கூறியுள்ளதால் இதனை 'மறைமுகமாகக் கூறல்' உத்தி எனலாம்.

### 6. செய்தி வாக்கியமாகக் கூறல்

ஒரு செய்தியை இதுதான் இப்படித்தான் என்று திருத்தமாகக் கூறல். இதில் உண்மை நிலை அப்படியே தெரியவரும். இந்த உத்தி இரு நூல்களிலும் கையாளப்பட்டுள்ளது.

செவிக்குண வில்லாத போழ்து சிறிது

வயிற்றுக்கு ஈயப் படும் (கேள்வி : 2)

தம்மபதத்தில் இது போன்ற வாக்கியங்கள் பல பாக்களில் காணப்படுகிறது. அவற்றில் ஒன்று –

உட்டாதே$^{3}$ அப்பமாதோ$^{3}$ஸஞ்ஞமோ த$^{3}$மேநச

தீ$^{3}$பம் கயிராத$^{3}$ மேதா$^{3}$வீ ஓகோ$^{4}$ நபி$^{4}$கிரதி

(தெளிவியல் பா. 5; பக்.14)

(மேல்மேல் எழும் உணர்வாலும், தெளிவாலும், மனவடக்கத்தாலும், புலனடக்கத்தாலும் அறிஞன் ஒருவன் வெள்ளத்தால் விழுங்கப்படாத ஒரு தீவை அமைகிறான்).

மேற்கண்ட இரு பாக்களிலும் கூறவந்த செய்திகளை நேரிடையாகவே தெளிவுப்பட கூறியுள்ளதால் இதனை 'செய்தி வாக்கியமாகக் கூறல்' எனலாம்.

### 7. செய்தி வாக்கியம் + ஒப்பீடு

ஒரு செய்தியை நேரடியாகக் கூறி அச்செய்தியினை மற்றொரு பொருளோடு ஒப்பிடுதல்.

மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்

பழித்த தொழித்து விடின்(கூடாஒழுக்கம் : 10)

(சான்றோர் பழித்த தீயொழுக்கத்தை விட்டு விலகிவிட்டால், தவத்திற்குரிய புறக்கோலங்களாகிய மொட்டை அடித்தல், முடி வளர்த்தலும் வேண்டாம்.

நந க்கா சரியா நஜடா நபங்கா
நா நா ஸா கா தண்டில ஸாயிகாவா ரஜோ
ஜல்லம் உக்குடி கப்ப தா நம்
ஸோ தேந்தி மச்சம் அவி திண்ணம் கங்கம் (ஒருப்பியல் :13)

உடை இல்லாதிருத்தலோ, சடை தரித்தலோ புழுதி படிதலோ உணவின்றி இருத்தலோ வருந்தரையிற் கிடத்தலோ சாம்பார் புசுதலோ அசையாது அமர்ந்திருத்தலோ ஐயம் ஒழியாத மனிதனைத் தூயனாக்குவதில்லை.

மேற் கூறிய பாக்களில் இரு நூலாசிரியர்களும் கூறவந்த செய்தியினை நேரிடையாகக் கூறுவதற்கு முன் அதனோடு சில செயல்களையும் ஒப்பிட்டுக்கூறி அதன் தொடர்ச்சியாக தான் கூற வந்தக் கருத்தை எடுத்துரைக்கும்பாங்கு காணப்படுகிறது. இதனை ஒப்பிடுடன் கூடிய செய்திவாக்கியமாகக் கருதலாம்.

**8.செய்தி வாக்கியம் + பலன்**

காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்

அன்னநீ ரார்க்கே உள (சுற்றந் தழால் : 7)

(காக்கை, கிடைத்த உணவை மறைக்காமல் தன் இனத்தைக் கூவியழைத்தே உண்ணும்; அத்தகைய தன்மை உடையவர்க்கே, செல்வங்கள் பலவுமுண்டு)

**தம்மபதம் :**

உத்திட்டே[2] நப்பமஜ்ஜேய்ய த[4]ம்மம் ஸுசரிதம் சாரே

த[4]ம்மசாரீ ஸுக[2]ம் யேதி அஸ்மிம் லேகே பரம்ஹிக (உலகவியல் பா. 2, பக்.81)

(எழுக; கவனம் இழந்திருக்க வேண்டாம், நல்ல ஒழுக்கம் உரைக்கும் தருமத்தைக் கடைபிடிக்க. தருமவழி நடப்பவன் இவ்வுலகிலும், மறுவுலகிலும் இன்புற வாழ்கின்றான்).

இவ்விரு பாக்களின் மூலம் நூலாசிரியர்கள் எவ்வாறு வாழ்வுநெறியை அமைத்துக்கொள்வது என்பதை செய்திவாக்கியமாகக் கூறி, அவ்வாறு வாழ்வதனால் ஏற்படும் பயன்களை பின்னர் விளக்கி அறிவுருத்தியுள்ளார். இதனையே செய்தியோடு கூடிய பலனையும் இணைத்துக் கூறும் உத்தியாகக் கொள்ளலாம்.

**9..பலன் + அறிவுறுத்தல்**

வேண்டின் உண்டாகத் துறக்க துறந்தபின்

ஈண்டியற் பால பல (துறவு : 2)

(துறவை மேற்கொண்டபின், இப்பிறவிலேயே அடையும் இன்பங்கள் பலவாம். அவற்றைப் பெறவிரும்பினால், வாய்த்தபோதே துறக்கவேண்டும்)

தம்மபதத்தில் இதுபோன்ற அமைப்பு உள்ளதா என்று ஆராயலாம்.

**10. செய்தி + ஒப்பீடு + பலன்**

தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்

கொள்வர் பயன்தெரிவார் (செய்ந்நன்றி அறிதல் – 104)

தினையளவு சிறிய உதவியை ஒருவர் செய்தாலும் அதன் பயனை அறிந்தவர்கள் அவ்வுதவியை பனையளவு உயர்ந்ததாக ஏற்றுக்கொள்வர். இக்குறளில், உதவிச் செய்தல் என்பது செய்தி, பனைமரம் என்பது ஒப்பிடு, உதவியைப்பெறுதலே பலனாகும்.

**தம்மபதம்**

அந்த பூதோ அயம் லோகோ, தநுகேத்த விபஸ்ஸதி

ஸகுந்தோ ஜாலமுத்தோவ அப்போ ஸக்காய கச்சதி (உலகவியல் – பா.8, பக்.83)

இவ்வுலகம் இருண்டது. சிலரே இதனைக் காண்கின்றனர். வலையினின்று விடுப்பட்ட பறவை போல சிலரே சுவர்க்கத்திற்குப் போகின்றனர். இதில், இருண்ட உலகத்திதைப் பார்த்தல் என்பதுச் செய்தி. கூண்டில் விப்பட்டப் பறவை உவமை, சுவர்கத்தில் செல்லுதல் என்பது பலன்.

மேற்கண்ட பாக்களில் நூலாசிரியர்கள் செய்தி, ஒப்பீடு, பலன் என்ற மூன்றையும் பயன்படுத்தி அறிவுரை கூறும் உத்தியை கடைப்பிடித்துள்ளனர்.

**11.ஒப்பீடு + பலன் கூறல்**

சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம்

சுடச்சுட நோற்கிற் பவர்க்கு (தவம் : 7)

(தீயிலிட்டுப் பொன்னைச் சுடச்சுடப் புடம்போடும் அளவிலும் ஒளிவிடுவது போலத் தவத்தில் துன்பம் வருத்திடவருத்திட ஞானம் என்பது பிறக்கும்)

பஞ்ச சிந்தே பஞ்ச ஜ ஹே பஞ்ச சுத்தாரி பாவயே

பஞ்ச ஸங்கா திகோ பிக்கு ஓக திண்ணோ திவுச்சதி (துறவி இயல் -11)

(ஐந்தைச் சிதைக்க, ஐந்தை விடுக, ஐந்துக்கு மேற் செல்க, ஐந்து தளைகளைக் கடந்த 'வெள்ளம் கடந்தவன்' என்று உரைக்கப்படுகிறான்).

இவ்விரு பாக்களிலும் பொன் மற்றும் வெள்ளத்தைஒப்பீடாகவும், துறவு நிலையை பலனாகவும் கூறப்பட்டுள்ளது/ ஆகையால் இவை ஒப்பீடு, பலன் கூறும் உத்தி எனலாம்.

**12.வினா வாக்கியமாகக் கூறல்**

வினாவாக்கியமாகக்கூறும் உத்தியினைப் பல இடங்களில்

இருவரும் கையாண்டுள்ளார்கள்.

குறிப்பின் குறிப்புணரா ஆயின் உறுப்பினுள்

என்ன பயத்தவோ கண் (குறிப்பறிதல் : 5)

(ஒருவரின் முகக்குறிப்பை கொண்டு, அகக்குறிப்பைஉணரா விட்டால், ஒருவன் தான் பெற்றுள்ள உறுப்புகளுள் கண்களால் ஆகிய பயன்தான் என்ன?)

புத்தா மத்தி$^{3}$ த$^{4}$னம் மத்தி இதி பா$^{3}$லோ விஹஞ்ஞதி

அத்தா ஹி அத்தநோ நத்த$^{2}$ குதோ புத்த குதோ த$^{4}$னம் (பேதை இயல் ; பா. 3; பக். 33)

மக்கள் எனக்கு உளர், செல்வம் எனக்கு உள்ளது, என்று பேதை மயங்குகிறான். தானே தனக்கு இல்லை என்னும்போது மக்கள் எங்கே? செல்வம் எங்கே?

**13.தொடர்பு நிலையில் கூறல்**

சொல்ல வந்த சிந்தனைக்கும் பாடலில் உள்ள செய்திக்கும் தொடர்புபடுத்திக் கூறும் நிலை. இவ்வுத்தி இரு நூல்களிலும் காணப்படுகிறது. இதை இருவகையாகப் பார்க்கபடுகிறது. அவை –

1. சொற்களை தொடர்புப்படுத்துதல்
2. பாக்களை தொடர்ச்சிப்படுத்துதல்

**சொற்களைத் தொடர்புப்படுத்துதல்**

உற்றவன் தீர்ப்பான் மருந்துழைச் செல்வான்என்று

அப்பால்நாற் கூற்றே மருந்து (மருந்து : 10)

(நோயுற்றவன், நோய் போக்கும் மருத்துவன், அவனின் மருத்துவ முறை, உடனிருந்து உதவுபவன் என, மருத்துவ முறை அந்த நான்கு கூறுகளை உள்ளடக்கியது).

மேற்கூறிய பாவில் மருந்து என்ற சொல்லை நோயுற்றவன், நோய் போக்கும் மருத்துவன், அவனின் மருத்துவ முறை, உடனிருந்து உதவுபவன் என்ற நாங்கு கூறுகலோடுத் தொடர்புப் படுத்தியுள்ளதால் இதை சொற்களை தொடர்பு படுத்துதல் எனும் உத்தி எனலாம். இந்த உத்தி தம்மபதத்தில் கையாளப்பட்டதாகத் தெரியவில்லை.

**பாக்களைத் தொடர்ச்சிப்படுத்துதல்**

ஓர் இயலில் கூறப்பட்டுள்ள பாக்களில் இடையில் உள்ள சில பாக்கள் ஒன்றோடோன்று தொடர்ச்சிப்படுத்திக் கூறும் போக்கு தம்மபதத்தில் மட்டுமே காணப்படுகிறது. சான்றாக மாசு என்ற இயலில் -

மலித்தியா துச்சரிதம் மச்சேரம் ததுதோ மலம்

மலாவே பாபகா தம்மா அஸ்மிம் லோகே பரம்ஹிச (பா:8)

(பெண்டிர்க்குத் தீயொழுக்கமே மாசாம். ஈவோனுக்கு உலோபகுணமே மாசாம். இவ்வுலகிலும், மறு உலகிலும் தீய வினைகளே மாசுகளாம்).

ததோ மலா மலதரம் அவிஜ்ஜா பரமம் மலம் ஏதம் மலம் பஹத்வாந நிம்மலா ஹோ த பிக்கவோ (பா:9)

(ஆயினும், மாசுகளில் மிகவும் மாசுடையது அறியாமை என்ற பெரிய மாசே. பிட்சுக்களே இந்த மாசை ஒழித்து மாசற்றவர்கள் ஆவீர்கள்).

மேற்கண்ட முதல் பாவில் பொது நிலையில் மாசுக் குறித்து கூறியதை அடுத்த பாவில் தொடர்புப்படுத்தி, அதன் தொடர்ச்சியாக 'ஆயினும்' என்ற வார்த்தையால் தொடர்ச்சியை நிலைநாட்டி துறவு நிலையில் மாசு குறித்துக் கூறியிருப்பதால் இதனை பாக்களை தொடர்ச்சிப்படுத்துதல் உத்தி எனலாம்.

**15. கதைசொல்லும் பாங்கு**

ஒரு கதையைக் கூறும்போது அதில் ஆரம்பம் முடிவு என்பது. இருக்கும். இந்த இரண்டிற்கும் இடையில் நடக்கின்ற விஷயங்களை கருத்துத் தொடர்ச்சியோடு சொல்லப்படுகிறது. அப்படி சொன்னால் மட்டுமே கதை என்ன சொல்லவருகிறது என்ற செய்தி புலப்படும். அவ்வாறில்லாமல் தொடர்பற்ற நிலையில் கதையைச் சொல்லிக்கொண்டு போனால் குழப்பம் வந்துவிடும். இது ஒரு முக்கிய உத்தியாகவே கதைச்சொல்லிகள் பயன்படுத்துவதுண்டு. இந்த உத்தி திருக்குறளில் இருப்பதாகத் தெரியவில்லை. ஆனால், தம்மபதம் இவ்வுத்தியை கையாண்டுள்ளது என்பதற்குச் சான்றாக அறிஞரைப் பற்றி கூறும் அப்பமாதி வக்கோ என்ற தெளிவியலில் மொத்தம் 12 பாக்கள் உள்ளன. அவற்றில் முதல் பாவில் அறிஞர் ஆவதற்கு முன் உள்ள நிலையில் தொடங்கி அறிஞர் என்பவன் நிர்வாண நிலைக்கு அருகில் வரும்வரை உள்ள படிநிலைகளை கருத்துச் சிதறாமல் வருசைப்படுத்திச் சொல்லப்பட்டது. இதில் இடையில் உள்ள ஒரு பாவை நாம் விட்டுவிட்டாலும் பொருள் புரியாமல் எதைப்பற்றி கூற விழைகிறது இந்த பா என்ற தடுமாற்றம் வந்துவிடும். ஆக ஒரு கருத்தை முழுமையாகச் சொல்வதற்கு புத்தர் கதைச்சொல்லும் பாங்கு என்ற இந்த உத்தியைக் கையாண்டு இருக்கிறார். தெளிவு (2)என்ற இயலில் இவர் கையாளப்பட்ட கதைச்சொல்லும் உத்தியை முதல் பாவில் தொடங்கி பன்னிரெண்டாவது பாவரை எப்படி கோர்வையாகச் சொல்லப்பட்டது என்பதை பார்க்கலாம் –

1. தெளிவுள்ளவர் யார், தெளிவில்லாதவர் யார் என்பதற்கான விளக்கம் தருகிறார்.
2. தெளிவுள்ளவர்களை அறிஞர் என்று குறிப்பிட்டு, அவர்கள் ஆரிய வழியைப் பின்பற்றுபவர் என்கிறார்.

3. இப்படிப்பட்ட அறிஞர்கள் ஒப்புயர்வற்ற நிர்வாணம் என்ற இன்ப வாழ்வை அடைகின்றனர்.
4. இந்த நிலையில் சென்றவனுக்கு புகழ் வந்து சேரும்.
5. இப்படி புகழ் பெற்றவர் சம்சாரம் என்ற கடலில் வெள்ளத்தால் விழுங்கப்படாத ஒரு தீவை அமைத்துக்கொள்கிறான்.
6. அவர் அறிவைச் செல்வமாக மதிப்பவர்.
7. தியான நிலையில் சென்று அதனதன் பயனை அடைவார்.
8. உச்சநிலை தியானப் பயனை அடைந்தவரை மற்றவர் பார்க்கும் நிலை.
9. மயக்கத்தில் உள்ளவர் இடையேயும், துக்கத்தில் உள்ளவர் இடையேயும் விரைந்து ஒடுகின்ற குதிரைப்போல் இருப்பான்.
10. தெளிவாக இருப்பதால் இந்திரன் உயர் பதவியை அடைகிறான்.
11. தெளிவு பிறந்தால் துறவியாகிவிடுகிறான். அப்போது அனைத்துப் பற்றுகளையும் விட்டுவிடுகிறான்,
12. துறவு நிலை அடைந்த ஒரு அறிஞர் இறுதியில் நிர்வாண நிலைக்கு அருகில் செல்கிறான்.

மேற்கூறிய 12 பாக்களும் தொடர்பு நிலையில் அமைந்துள்ளதால் இதை கதைச்சொல்லும் பாங்கு என்ற உத்தியை கையாண்டுள்ளது என கூறலாம். இவ்வுத்தி திருக்குறளில் கடைப்பிடித்ததாகத் தெரியவில்லை.

**கருத்தியல் ஒப்பீடு**

பொதுவாக எந்த ஒரு ஒப்பிட்டாய்வாக இருந்தாலும் ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட பொருள்களை கருத்தியல் ரீதியாகப் பார்க்கும்போது கீழ்க் கண்ட 4 நிலைகளில் ஒப்பிட்டு அணுகலாம். அவை :

1. கருத்தியல் ஒற்றுமை
2. கருத்தியல் ஒற்றுமையில் வேற்றுமை
3. கருத்தியல் வேற்றுமை
4. கருத்தியல் வேற்றுமையில் ஒற்றுமை

இதன் அடிப்படையில் இரு மொழி நூலாசிரியர்களும் கூறியது அறக் கருத்துக்களே ஆனாலும், அக் கருத்துக்களை ஒப்பீட்டு ஆராயும் பொருட்டு திருக்குறள் குறிப்பிட்டுள்ள 133 அதிகாரங்களில் கொடுக்கப்பட்டுள்ள தலைப்புகளை தம்மபதத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கையில் 8 இயல்கள் ஒத்தவையாக அமைந்துள்ளதை அறியமுடிகிறது. அவை:-

| திருக்குறள் | தம்மபதம் |
|---|---|
| சான்றாண்மை (99) | அறிஞரியல்,அந்தணரியல் |
| தீவினையச்சம் (21) | தீவினையியல் |
| பெரியாரைதுணைக்கோடல் (45) | முதுமையியல் |
| பெரியாரை பிழையாமை (90) | |
| வெகுளாமை (31) | சினவியல் |
| அறன் வளியுறுத்தல் (4) | அறந்தாரியல் |
| துறவு(35), | துறவியல் |

தவம்(27) புத்தரியல்

இவைதவிர மற்ற கருத்துக்கள் அனைத்து இயல்களிலும் பலவிதமாகப் பரவிக்கிடக்கின்றன. சான்றாக திருக்குறளில் மலருக்கென தனி ஒரு இயல் படைக்கப்படவில்லை. ஆனால் தம்மபதத்தில் மலருக்கெனவே 'புப்ப வக்கோ' என்ற ஒரு இயல் தனியாகவே அமைக்கப்பட்டுள்ளது. இதில் மொத்தம் 16 பாக்கள் உள்ளன. அவற்றில் 7 பாக்கள் திருக்குறளில் இறைவணக்கம், நலம்புனைத்துரைத்தல்,என்ற அதிகாரங்களில் ஒத்து காணப்படுகின்றன. அவற்றின் விளக்கம் வருமாறு –

திருக்குறளில் -

மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்

நிலமிசை நீடு வாழ்வார் (இ.வ. கு-3)

மலர்க்காணின் மையாத்தி நெஞ்சே இவள்கண்

பலற்காணும் பூஒக்கும் என்று (ந. பு. கு .1112)

மலரன்ன கண்ணாள் முகம் ஒத்தியாயின்

பலர்காணத் தோன்றல் மதி (ந. பு. 1119)

மேற்கண்ட குறள்களில் மலரை பொது நிலையில் உவமையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

மேலும் –

நல்நீரை வாழி அனிச்சமே நின்னினும்

மெல்நீரள் யாம்வீழ் பவள் (ந.பு.1111)

காணின்குவளை கவிழ்ந்து நிலன் நோக்கும்

மாணிழை கண்ஒவ்வேம் என்று (ந.பு.1114)

அனிச்சப்பூக் கால்களையான் பெய்தாள் நுசுப்பிற்கு

நல்ல படாஅ பறை (ந.பு. 1115)

அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்

அடிக்கு நெருஞ்சிப் பழம் (ந.பு.1120)

மேற்கண்ட குறள்களில் அனிச்ச மலரை பெண்ணின் மென்மைத் தன்மைக்கும், இடைக்கும், பாதத்திற்கும் உவமையாகக் கையாளப்பட்டுள்ளது. குவளை மலரை பெண்ணின் கண்களுக்கு சிறப்பு நிலையில் ஒப்பிட்டு கூறப்பட்டுள்ளது.

ஆனால், தம்மபதத்தில் கூறப்பட்ட 16 பாக்களில் மலரை, அறிஞர் (1,2), பெண் (4). துறவு வாழும் இடம் (6), என்பவற்றுக்கு பொது நிலையிலும்,மலரின் பண்புகளை வாக்குத் தவறுதல் (9),நல்ஒழுக்கம் (12) நற்பண்பு (11), நல்லறிவாலன் (15, 16) எனும் இடங்களில்மனித உள்ளத்திற்கு ஒப்புமையாக்கி சிறப்பு நிலையிலும் கூறப்பட்டுள்ளன. அவற்றில்சில -

புப்பா³நீ ஹெவ பசிநந்தம் வ்யாஸத்தமாநஸம் கரம்

ஸுத்தம் கா³மம் மஹோகோ⁴வ மச்சு ஆதா³ய க³ச்சதி

இனம் | INAM (IIETS)
E-ISSN: 2455 - 0531 | UAN: TN0300061112
மலர் : 10 | இதழ் : 38 | மே | 2024 | Vol.: 10 | Issue: 38 | May | 2024

(மலரியல்:4)

(மலர்களையே திரட்டிக்கொண்டிருக்கும் கலங்கிய மனம் உள்ள மனிதனை, உறங்கும் ஊரைப் பெரு வெள்ளம் விழுங்குவது போல எமன் எடுத்துச் செல்கிறான்)

மேற்கூறிய பாவில் மலரைபெண்ணுக்கு உள்ளுறை உவமையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

சந்த[3]னம் தக[3]ரம் வாபி உப்பலம் அத[2] வாஸ்ஸிகி

ஏதேஸம் கந்த[4] ஜாதநம் ஸீலக[3]ந்தோ[4] அநுத்தரோ (மலர் : 12)

(சந்தனம், தகரம் ஆயினும் நீலோற்பலம்,வனமல்லிகை மலர்கள் ஆயினும் இம்மணப் பொருள்களின் மணத்தைக் காட்டிலும் சீல கந்தம் மிகவும் சிறந்தது).

கருங்குவளை, வனமல்லிகை மலர்களில் வரும் மணத்தைக் காட்டிலும் ஒரு மனிதனின் நல் ஒழுக்கம் என்கின்ற மணமே சிறந்தது என்கிறது மேற் கூறிய பா.

இவ்வாறாக, திருக்குறள் சிறப்புநிலையில்பெண்ணின் மென்மைக்கும், உறுப்புகளுக்கும் உவமையாகப் பயன்படுத்திய மலரை, தம்மபதம் மனித நல் ஒழுக்கத்திற்கு உவமையாகப் பயன்படுத்தி மலரைச் சிறப்பித்துள்ளது எனலாம்.இரு நூல்களும் மலரை உவமையாகப் பயன்படுத்தியதில் ஒன்றுபட்டும், மலரை ஒப்புமைக்குப் பயன்படுத்திய பொருள்களில் வேறுபட்டும் காணப்படுகிறது. ஆகையால் இங்கு ஒன்றுமையில் வேற்றுமை என்ற கோட்பாடு ஒத்துப் போகிறது.

**சொல் தொடர்பான கருத்தியல்கள்**

எடுத்துக்கொண்ட தலைப்பிற்கிணங்க இரு நுல்களிலும் உள்ள 'சொல்' தொடர்பான கருத்தியலை கீழ் வருமாறு ஆராயப்பட்டுள்ளது.

| திருக்குறள் – 1330 குறள்கள் | | | | | தம்மபதம் – 423 செய்யுள்கள் | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| வ. எண் | அதிகார எண் | அதிகாரப் பெயர் | குறள் எண் | மொத்தம் | இயல் எண் | அதிகாரப் பெயர் | குறள் எண் | மொத்தம் |
| | | அறத்துப்பால் | | | | | | |
| 1 | 3 | நீத்தார் பெருமை | 21,22,28 | 3 | 1 | இரட்டை செய்யுளியல் | 1,9,20 | 3 |
| 2 | 4 | அறன் வலியுருத்தல் | 35 | 1 | 6 | அறிஞரியல் | 1, 8 | 2 |
| 3 | 10 | இனியவைகூறல் | 91,94, 96-100 | 7 | 7 | அறிவர் இயல் | 7 | 1 |
| 4 | 12 | நடுவு நிலைமை | 119 | 1 | 8 | ஆயிரவியல் | 1-3 | 3 |
| 5 | 16 | பொறையுடைமை | 151 | 1 | 10 | ஒறுப்பியல் | 5,9,1, 15 | 4 |
| 6 | 20 | பயனில சொல்லாமை | 191-200 | 10 | 12 | ஆன்மவியல் | 2, 8 | 2 |
| 7 | 30 | வாய்மை | 291-293, 295-298 | 7 | 13 | உலகவியல் | 2, 10 | 2 |
| | | பொருட்பால் | | | | | | |
| 8 | 41 | கல்லாமை | 401,402 | 5 | 14 | புத்தரியல் | 6, 7, 16 | 3 |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | | 404-406 | | | | | |
| 9 | 42 | கேள்வி | 411-420 | 10 | 15 | நலவியல் | 8 | 1 |
| 10 | 43 | அறிவுடைமை | 423, 424 | 2 | 17 | சினவியல் | 3,4,7,9,12,13,14 | 7 |
| 11 | 44 | குற்றங்கடிதல் | 443 | 1 | 18 | மாசியல் | 10,12 | 2 |
| 12 | 45 | பெரியாரைத் துணைக்கோடல் | 447, 428 | 2 | 19 | அறந்தாரியல் | 1,3,4,6,7,9 | 6 |
| 13 | 65 | சொல்வன்மை | 641-650 | 10 | 20 | விழி இயல் | 9 | 1 |
| 14 | 67 | வினைத்திட்பம் | 664 | 1 | 22 | நரகவியல் | 1 | 1 |
| 15 | 68 | வினை செயல்வகை | 680 | 1 | 23 | யாணையியல் | 1,12 | 2 |
| 16 | 69 | தூது | 681-683 685-687 689 | 7 | 24 | வேட்கை இயல் | 19 | 1 |
| 17 | 70 | மன்னரைச் சேர்ந்தொழு குதல் | 694-697 | 4 | 25 | துறவி இயல் | 1-4, 19 | 5 |
| 18 | 71 | குறிப்பறிதல் | 701, 704, 707 | 3 | 26 | அந்தணர் இயல் | 9,20 | 2 |
| 19 | 72 | அவையறிதல் | 711-713, 715-720 | 9 | | | | |
| 20 | 73 | அவையஞ்சாமை | 721-730 | 10 | | | | |
| 21 | 76 | பொருள் செயல்வகை | 752 | 1 | | | | |
| 22 | 82 | தீ நட்பு | 818-820 | 3 | | | | |
| 23 | 83 | கூடா நட்பு | 826, 827 | 2 | | | | |
| 24 | 108 | கயமை | 1078 | 1 | | | | |
| | | இன்பத்துப் பால் | | | | | | |
| 25 | 112 | நலம் புனைத்துரைத்தல் | 1115 | 1 | | | | |
| 26 | 113 | காதற் சிறப்புரைத்தல் | 1121 | 1 | | | | |
| 27 | 114 | நாணுத்துறவு உரைத்தல் | 1131, 1138, 1139 | 3 | | | | |
| 28 | 115 | அலர் அறிவுறுத்தல் | 1141-1144, 1146, 1147 | 6 | | | | |
| மொத்த குறள்கள் | | | | 113 | | | | 48 |

மேற்கண்ட அட்டவணைப்படி கணக்கிட்டு ஆராய்ந்துப் பார்க்கும்போதுதிருவள்ளுவர் 1330 குறட்பாக்களில் 113 லும் புத்தர் 423 செய்யுள்களில் 48 லும் 'சொல்' தொடர்பான கருத்தியலுக்காக கையாண்டுள்ளனர். இதனடிப்படையில் எண் விகிதப்படி ஆராயுங்கால் திருவள்ளுவர் தனது

குறட்பாக்களில் 08.50 சதவிகிதமும், புத்தர் தனது செய்யுள்களில் 11.35 சதவிகிதமும் சொல் தொடர்பான கருத்தியலுக்கு இடம் அளித்து சிறப் பித்துள்ளார். இவற்றைக் கீழ்க்கண்டவாறு சான்றுகளுடன் விளக்கி ஆராயப்பட்டுள்ளது.

**1. கருத்து ஒற்றுமை**

எந்தவோர்ஒப்பீட்டாய்வை மேற்கொண்டாலும் அதில்பெரும்பான்மையாகவோ அல்லது சிறுபான்மையாகவோ கருத்து ஒற்றுமை காணப்படுவது இயல்பேயாகும். அந்த வகையில் திருக்குறள் மற்றும் தம்மபதம் இரு நூல்களிலும் பல இடங்களில் ஒன்றுபட்டே காணப்படுகிறன. அவற்றில் சில-

சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்

சொல்லிய வண்ணம் செயல் (வினைத்திட்பம் : 4)

(எந்த செயலையும் நாம் எளிதில் முடித்து விடுவோம் என்று கூறுவது எளிது. சொன்னபடி செய்து முடித்தல் என்பது முடியாததாகும்).

யதா$^{3}$மி ருசிரம் புப்ப$^{2}$ம் வண்ணவந்தம்அக$^{3}$ந்த$^{4}$கம்

ஏவம் ஸூபா$^{4}$ஸிதா வாசா அப$^{4}$லா ஹோதி அகுப்ப$^{3}$தோ (மலர் இயல் : 8)

அழகும் நல்ல நிறமும் உள்ள மலர் மணமற்றதாயின் பயன்படாதது போலவேதான் சொன்னவண்ணம் செய்யாத ஒருவனுடைய நல்ல பேச்சும் பயன்படுவதில்லை.

கலங்காது கண்ட வினைக்கண் துளங்காது

துக்கம் கடிந்து செயல் (வினைத்திட்பம் :8)

தெளிவாக ஆராய்ந்து மேற்கொண்ட செயலை கலங்காது சோர்வடையாமல் செய்து முடிக்கவேண்டும்.

யதா$^{3}$மி ருசிரம் புப்ப$^{2}$ம் வண்ணவந்தம் ஸக$^{3}$ந்த$^{4}$கம்

ஏவம் ஸூபா$^{4}$ஸிதா வாசா ஸப$^{4}$லா ஹோதி ஸகுப்ப$^{3}$தோ (மலர் இயல் : 9)

(அழகும் நல்ல நிறமும் உள்ள மலர் மணமும் பொருந்தி இருப்பின் பயன்படுவதுப் போலவே தான் சொன்னவண்ணம் செய்யும் ஒருவனது நன் மொழி பயன் விளைவிப்பதாகும்).

மேற்கூறிய பாக்கள் மூலம் சொன்ன சொல்லை செய்து முடிக்கும் அவசியத்தையும், ஆற்றலையும் அதனால் விளையும் பலன்களையும் ஒருமித்தக் கருத்தோடு விளக்கியுள்ளதால் கருத்து ஒற்றுமை உடையது எனலாம்.

**2. கருத்து ஒற்றுமையில் வேற்றுமை**

தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை

வீயாது அடிவுறைந் தற்று (வினையச்சம் : 8)

(பிறருக்கு தீங்குச் செய்தவர் கெட்டுப்போவது எப்படி என்றால், ஒருவன் நிழல் அவனை இடைவிடாது தொடர்ந்து வந்து காலடியில் தங்குவதுப் போலாகும்).

மநோ புப்ப$^{3}$ங்க$^{3}$மா த$^{4}$ம்மா மநோ செட்டா$^{2}$மநோமய

மநஸா சே பது$^{3}$ட்$^{1}$டேந பா$^{4}$ஸதிவா கரோதிவா

ததோ நம் து$^{3}$க்க$^{2}$மந்வேதி சக்கம்வ வஹதோபத$^{3}$ம் (இரட்டை செய்யுளியல் : 1)

(ஒழுக்க இயல்கள் மணநிலையைப் பின்பற்றியவை. மனச் செயலால் நிகழ்பவை. மனோமயம் ஆனவை. தீயநினைப்போடு ஒருவன் பேசினும்செய்யினும் இழுப்பவன் அடியைத் தொடர்ந்து சக்கரம் நடப்பதுப் போலவே அவனைத் துன்பம் தொடரும்.

மநோ புப்ப$^{3}$ங்க$^{3}$மா த$^{4}$ம்மா மநோ செட்டா$^{2}$ மநோமய

மநஸா சே பஸந்நேந பா$^{4}$ஸதிவா கரோதிவா

ததோ நம் ஸுக$^{2}$மந்வேதி சா$^{2}$யாவ அநபாயிநீ (இரட்டை செய்யுளியல் : 2)

ஒழுக்க இயல்கள் மணநிலையைப் பின்பற்றியவை. மனச் செயலால் நிகழ்பவை. மனோமயம் ஆனவை. நல்லநினைப்போடு ஒருவன் பேசினும்செய்யினும் விட்டு விளகாத நிழலைப்போல இன்பம் தொடரும்.

மேற்கூறிய பாக்களை ஒப்பிட்டு ஆராயும்போது திருவள்ளுவர் துன்பத்தை நிழலோடு உவமைப் படுத்தி விளக்கியுள்ளார். ஆனால், புத்தர் இன்பத்தை அதே நிழலோடு உவமைப்படுத்தி சிறப்பித்துள்ளார்.

இதேபோல துன்பத்தை உவமையாக்கி கூறுகையில் இருவருமே ஒத்த கருத்தைக் கொண்டிருந்தாலும் திருவள்ளுவர் நிழலையும் புத்தர் சக்கரத்தையும் வேறுபட்ட உவமைகளாகக் கையாண்டுள்ளனர். ஆகவே, இருவரும் கருத்தில் ஒருமித்து ஒன்று பட்டிருந்தாலும் உவமைப்படுத்துவதில் ஒற்றுமையில் வேற்றுமை என்ற கோட்பாட்டில்அமைத்துள்ளது என்பதை அறியலாம்.

### 3. கருத்தியல் வேற்றுமை

கொல்லா நலத்து நோன்மை பிறர்தீமை

சொல்லா நலத்து சால்பு (சான்றாண்மை :4)

(விரதமேன்பது பிற உயிர்களைக் கொலைச் செயாமையை அடிப்படையாகக் கொண்டது. சான்றாமை என்பது பிறர் குற்றத்தை சொல்லாத நிறை குணத்தை அடிப்படியாகக் கொண்டது).

நீ தீ$^{4}$நம்வ பவத்தாரம் யம் பஸ்சே வஜ்ஜ த$^{3}$ஸ்சிநம்

நீக்$^{3}$க$^{3}$ய்ஹ வாதி$^{3}$ம் மேதா$^{3}$விம் தா$^{3}$திஸம் பண்டி$^{3}$தம் ப$^{4}$ஜே

தா தி$^{3}$ஸம் ப$^{4}$ஜமாநஸ்ஸ சேய்யோ ஹோ தி நபாபியோ (அறிஞரியல்: 1)

(தன் குறைகளை எடுத்துரைப்பவனும் தள்ளத்தக்கவை இவை என்று காட்டுபவனுமான அறிவாலனை ஒருவன் கண்டால் அவனைப் புதையல் தேடித் தருவானைப் போலக் கருதிப் போற்றவேண்டும். அத்தகைய பெரியோனைப் பின்பற்றியது சிறப்பேயாம் இழிவாகாது).

மேற்கண்ட குறளில் திருவள்ளுவர் பிறருடைய குற்றத்தைச் சொல்லாத நிறைகுணத்தை அடிப்படையாகக் கொண்டவரை சான்றோர் எனவும் சான்றாண்மையின் இலக்கணமாகவும் சித்தரித்துள்ளார், ஆனால் புத்தர் தன் குறைகளை, குற்றங்களை எடுத்துரைப்பவரை அறிவாளன் என்றும் பெரியோர் என்றும் சித்தரித்துள்ளார். இதனை கருத்தியலில் வேற்றுமையாகக் கருதலாம்.

### 4. வேற்றுமையில் ஒற்றுமை

இனிய உளவாக இன்னாத கூறல்

கனிஇருப்பக் காய் கவர்ந்தற்று (இனியவை கூறல் : 10)

(இனிய சொற்கள் இருக்கும்போது அவற்றைக் கூறாமல் இனிமையற்ற கொடுஞ்சொற்களைப் பேசுவது இனிய கனிகளை உண்ணாது காய்களை விரும்பி உண்பது போன்றதாகும்).

யோமுக$^{2}$ ஸாஞ்ஞு தோ பி$^{4}$க்கு மந்தபா$^{4}$ணி அநுத்$^{3}$த$^{4}$தோ

அத்த$^{2}$ம் த$^{4}$ம்மம்ச தீ$^{3}$பேதி மது$^{3}$ரம் தஸ்ஸ பா$^{4}$ஸிதம் (துறவு இயல் : 4)

(தெளிந்த பொருளைப் பேசுகின்றவனும் பெருமிதப் பேச்சு இல்லாதவனும் பொருளையும் அறத்தையும் விளக்குபவனும் ஆகிய வாக்கை அடக்கிய துறவி எவனோ அவன் பேச்சு இனிதே).

மேற்கண்ட பாக்களில் இனிய சொற்களை பயன்படுத்துதல் தொடர்பாக திருவள்ளுவர் புத்தர் இருவரும் ஒத்த கருத்துடையவராக இருப்பினும் வேறுபட்டச் சூழல்களில் இனிய சொற்கள் கூறுதலைக் கையாண்டுள்ளனர். திருவள்ளுவர் பொது வாழ்வியல் நெறிக்கான அடிப்படைத் தேவையாகவும் புத்தர் துறவியல் நெறிக்கான அத்தியாவசியத் தேவையாகவும் இதனை கையாண்டுள்ளனர். ஆகவே, இந்த உத்தியை வேற்றுமையில் ஒற்றுமையாகக் கருதலாம். மேலும் திருவள்ளுவர் இனிய சொற்களுக்கும் கடும் சொற்களுக்கும் வேறுபட்ட எதிர் நிலைகளான கனியையும், காயையும் உவமைகளாகக் கொண்டு வேற்றுமையிலும் ஒற்றுமையை நிலைநாட்டியுள்ளார்.

**முடிவு**

இரு நூல்களிலும் கூறப்பட்டுள்ள சொல் தொடர்பான கருத்தியல்களை நுட்பமாக ஆராய்ந்து நோக்குங்கால் திருக்குறளும் தம்மபதமும் பெரும்பாலான பாக்களில் ஒத்த கருத்தியல்களையே, ஒருமித்த வாழ்க்கை நெறிமுறைகளையே வெளிப்படுத்துகின்றன. இருப்பினும், திருகுறளில் பெரும்பாலும் பொது வாழ்வியல் நடைமுறைகளுக்கு ஏற்றவாறு கருத்துகளையும், நெறிமுறைகளையும் பல்வேறு முறைகளில் உவமைகளைக் கொண்டும் விளக்கி விவரிக்கப்பட்டுள்ளது. ஆனால் தம்மபதத்தில் குறிப்பாக துறவு வாழ்வியல் நெறிமுறைகளைச் சார்ந்தே வாழ்வியல் முறைகளுக்கான வரையறைகள் நிர்ணயிக்கப்பட்டும், வடிவமைக்கப்பட்டும் அமைந்துள்ளது. மேலும் துறவு வாழ்வியல் முறையினை வலியுருத்தியும் அதனைச் சிறப்பித்தும், அதற்கு முக்கியத்துவம் கொடுத்தும்,வாழக் கூடிய துறவு வாழ்வு நெறிமுறைகளைச் சார்ந்துள்ளதாகவே அமைந்திருப்பதை பல்வேறு இடங்களில் காணமுடிகிறது.

**துணைநின்றவை**


1. மாணிக்கம்.சே (2012), திருக்குறள் தெளிவுரை, சிவா பதிப்பகம், தஞ்சாவூர்.
2. மகாதேவன்.டி.எம்.பி. (1952): அப்பாதுரை எம்.ஆர்.(பதி.), தம்மபதம், (தமிழ் மொழிபெயர்ப்பு), சென்னை.
3. சசிவர்ணத் தேவர். (2023, மே 7). விக்கிப்பீடியா. Retrieved 15:55, மே 27, 2024 from https://ta.wikipedia.org/s/7uez
4. buddhanet- https://www.buddhanet.net/pdf_file/scrndhamma.pdf, Retrieved 15:55, மே 27, 2024
5. திருக்குறள் - திருவள்ளுவர், http://www.thirukkural.com/2009/02/blog-post_1935.html?m=1, Retrieved 15:55, மே 27, 2024
6. தமிழ் கற்போம் - https://www.ytamizh.com/thirukural/kural-1112/#google_vignette, Retrieved 15:55, மே 27, 2024
7. திருக்குறள் - https://thirukkural.io/112/nalampunaindhuraithal/, Retrieved 15:55, மே 27, 2024
8. Mokshananda Buddhavihara – https://www.youtube.com/@mokshanandabuddhavihara9237, Retrieved 15:55, மே 27, 2024

